LIBRARY
27 APR 1961
STATE LEGISLATURE

# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

**Saturday, the 20th August 1960.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Recovery of loans from handloom weavers*

*316 *Q.*—SRI S. M. ANNAMALAI: கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

வடாற்காடு மாவட்டத்தில் சர்க்கார் கடனைத் திருப்பிக் கட்டாததன் காரணமாக எத்தனை கைத்தறி நெசவாளர்களின் சொத்துக்கள் ஜப்தி செய்யப்பட்டன?

THE HON. SRI R. VENKATARAMAN: No properties of Weavers in North Arcot district have been attached for non-repayment of loans sanctioned by Government.

SRI S. M. ANNAMALAI: ஸார், சொத்துக்களை ஜப்தி செய்யாவிட்டாலும் கூட, கடன்களை உடனடியாக வசூலிக்க கிராம அதிகாரிகள் முயற்சிக்கிறார்கள்; நூல் விலை அதிகம் ஏறி இருப்பதால், அவர்களிடையே அதிக கஷ்டம் நிலவுவதால், குறைந்த பட்சம் இரண்டு ஆண்டுகளுக்காவது கடன் வசூலிப்பதைத் தள்ளிப் போட சர்க்கார் முன் வருவார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN: கனம் அங்கத்தினர் சொல்லுவது சரியில்லை; கூட்டுறவு இயக்கத்தில் இருப்பவர்களுக்கு நூல் விலை அதிகரிப்பதனால் பாதகம் ஒன்றும் இல்லை. அதிகரித்த நூல் விலையைக் கொடுத்தும், நியாயமான கூலி கொடுத்தும், அதற்குமேல், ஆறேகால் சதவிகிதம் கொடுத்து விற்பனைக்கு ஏற்பாடு செய்கிறார்கள். ஆதலால் நூல் விலை அதிகரிப்பால் அவர்கள் பாதிக்கப்படுவதாகச் சொல்லுவது சரியில்லை. இந்தக் கடன் தொகை சம்பந்தப்பட்டவரை, அதை சிறு சிறு இன்ஸ்டால்மெண்டாகத்தான் வசூல் செய்கிறோம். சிறுகச் சிறுகக் கொடுப்பதுதான் நெசவாளர்களுக்கும் நல்லது.

SRI A. MARIAPPAN: இம்மாதிரிச் சிறுகச் சிறுக வசூலிப்பதில் ஒரு சில அரசியல் கட்சியின் தலையீட்டினால் தடை ஏற்படுகிறது என்பது அமைச்சரவர்களுக்குத் தெரியுமா?

THE HON. SRI R. VENKATARAMAN: என்ன காரணம் என்று தெரியவில்லை. ஆனாலும், சிலர் கடனைக் கொடுக்க வேண்டாம் என்று பிரசாரம் செய்வதாகத் தெரிகிறது.

27 APR 1961

[20th August 1960

SRI T. T. DANIEL : Sir, may I know what action the Government usually take when weavers are unable to pay back their loans?

THE HON. SRI R. VENKATARAMAN : Ordinarily persuasion.

SRI S. M. ANNAMALAI : ஸார், கூட்டுறவு இயக்கத்தில் சேராதவர்களிடமிருந்து கடன் வசூலிக்கப் படுகின்றன; அவர்களுக்கு, கூட்டுறவு இயக்கத்தில் சேர்ந்தவர்களைப் போன்று, கூட்டுறவு நன்மைகள் ஏற்படுவதில்லை; அப்படிப்பட்டவர்களிடமிருந்து கடன்களை வசூலிக்க குறைந்த பட்சம் இரண்டு ஆண்டுகள் தள்ளிப் போட சர்க்கார் முன் வருவார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN : கூட்டுறவு இயக்கத்தில் சேராதவர்களைப் பற்றி தனிக் கேள்விதான் போடவேண்டும்; அதைப் பரிசிலனை செய்து, சர்க்கார் வேண்டிய நடவடிக்கை எடுப்பார்கள்.

SRI M. S. SELVARAJAN : ஸார், துணி விலை அதிகமாகியிருப்பதன் காரணமாக, விற்பனைத் தேக்கம் ஏற்பட்டால், அத்தகைய தேக்கத்தைத் தவிர்க்க, அரசாங்கமே விற்பனைக்கு ஏற்பாடு செய்து இருப்பது உண்மையா?

THE HON. SRI R. VENKATARAMAN : இன்று அந்த விதமான நிலை இல்லை. மில் துணியை விட கைத்தறித் துணி மலிவாகவே இருக்கிறது, ஸ்டாக் அதிகமாக இல்லை, விற்பனையும் நடக்கிறது.

SRI A. A. RASHEED : Sir, may I know whether the Government have any information regarding the amount of loan due from the weavers in the North Arcot district?

THE HON. SRI R. VENKATARAMAN : A separate question may be put.

*Bridge across Tambaraparani*

* 317 *Q.*—SRI D. S. AUTHIMOOLAM : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether there is any proposal to construct a bridge between Viravanallur and Mukkudal, Tirunelveli district, across the river Tambaraparani; and

(*b*) if so, the stage at which the matter stands now?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) No, Sir.
(*b*) Does not arise.

SRI D. S. AUTHIMOOLAM : ஸார், இந்த முக்கூடல் பகுதி, கைத்தொழில்கள் சம்பந்தப்பட்ட இடம்; 50,000 தொழிலாளர்களுக்கு மேல் வேலைசெய்யும் தொழில்களைக் கொண்ட இடம். சிறு கிராமம் ஆனாலும், அங்கே நிறைய வான்களும், லாரிகளும்

20th August 1960]

போக்குவரத்து உண்டு. ஆகவே, அப்பேர்ப்பட்ட வியாபார ஸ்தலம் என்ற முக்கியத்துவத்தை அனுசரித்து, அங்கே ஒரு அணை கட்டாவிட்டாலும், ஒரு "காஸ்வே" ஐயாவது கட்ட அரசாங்கம் நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அணை கட்டுவது பற்றி கேள்வி கேட்டதால், ஒன்றுமில்லை என்று பதிலளித்தேன். முக்கூடலில் "காஸ்வே" கட்டுவது சம்மந்தமாக ஒரு ப்ரொபோசல், 1956-ல் கொண்டுவரப்பட்டது ; அது டிஸ்ட்ரிக்ட் போர்ட் வேலையானதால், அது பரிசீலனையில் இருக்கிறது. டிவிஷனல் என்ஜினியர் (ஹைவேஸ் அண்ட் டிஸைன்ஸ்) இப்பொழுது பரிசிலனை செய்துகொண்டிருக்கிறார்.

SRI D. S. AUTHIMOOLAM : இப்பொழுது திருநெல்வேலி ஜில்லாவில் மேற்குப் பகுதியில் உள்ள அம்பாசமுத்திரம், திருநெல்வேலி தாலுகாக்கள் மேல்ச்செவல் என்ற இடத்தில் காஸ்வே கட்டவேண்டுமென்று தவறுதலாக சீப் என்ஜினியர் சிபாரிசு செய்திருந்தார்கள். அது சம்மந்தமாக மகஜர்களும் அனுப்பப்பட்டிருக்கின்றன, அதை ரத்துசெய்து, அதை முக்கூடலில் கட்ட வேண்டுமென்று. அது சம்மந்தமாக சர்க்கார் தீவிரமாக பரிசீலனை செய்ய முடியுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : தனிக்கேள்வி போடவேண்டும்.

MR. SPEAKER : கனம் மந்திரி பக்தவத்சலம் அவர்கள் இல்லாததால், அவர்கள் சம்பந்தப்பட்ட 318, 319 கேள்விகளை இன்னொரு நாளைக்கு எடுத்துக் கொள்ளலாம். அடுத்த கேள்வி, 320.

*Poramboke lands*

*320 Q.—SRI P. G. MANICKAM : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

ஹரிஜனங்கள் குடியிருந்துவரும் நத்தம் புறம்போக்கு நிலங்களை அவர்களுக்கே பட்டா செய்து கொடுக்க என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : The procedure prescribed in the Board's Standing Orders is followed in the matter of assignment of house-sites to Harijans, who are in occupation of house-sites in Natham porambokes. The Government have instructed all Collectors to take action in all cases of Harijan Nathams in the enjoyment of the caste Hindus, assign the sites to the Harijans, if the sites can be proved as lands at the disposal of the Government and if not, propose their acquisition for assignment to the Harijan occupants.

SRI P. G. MANICKAM : ஸார், மேற்கண்ட ஊர் நத்தமானது, ஹரிஜனங்களுக்குப் பட்டா செய்துக் கொடுக்காமல் இருப்பதால், அதை அவர்கள் பூரணமாக அனுபவிக்க முடியாமல்

இருக்கிறார்கள். அங்கே மரங்கள் இருந்தால், அவர்கள் பொது நலத்திற்கும் அனுபவிக்க முடியவில்லை; ஊர் நத்தம் என்ற முறையில், சர்க்கார் அதிகாரிகள் வேறு உபயோகத்திற்கு எடுத்துக்கொண்டு விடுகிறார்கள். ஆகவே, ஹரிஜனங்கள் குடியிருக்கும் ஊர் நத்தத்தை அவர்களுக்கே பட்டா செய்து கொடுக்க சர்க்கார் முயற்சிக்குமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: அப்படிப்பட்ட முயற்சி பற்றித்தான் முன்னே சொன்னேன், ஹரிஜன நத்தத்தில் காஸ்ட் ஹிந்துக்களுக்குச் சொந்தமாக இருந்தாலும் அப்படியில்லாமல், வேறு யாருக்காவது சொந்தமாக இருந்தாலும் அதை அக்வயர் பண்ணிக் கொடுக்க ஏற்பாடு செய்யப்படும்.

SRI M. K. SOMASUNDARAM: சர்க்கார் புறம்போக்கு நிலத்தில் ஹரிஜனங்களுக்கு பட்டா செய்து கொடுக்க வேண்டும் என்று இரண்டு மூன்று வருஷங்களாக கேட்டுக்கொண்டிருந்தும் காலதாமதமாகிறது. அதைச் சீக்கிரமாகச் செய்வதற்கு அரசாங்கம் தீவிர நடவடிக்கை எடுக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU: இப்பொழுது கொஞ்ச காலமாக தீவிர நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது. அதிகப்படியான சிப்பந்திகளைப் போட்டு துரிதமாக வேலை செய்ய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

SRI P. G. MANICKAM: ஊர் நத்தத்திலுள்ள இடங்களில் மரங்கள் இருக்கின்றன. அந்த இடங்கள் ஜாதி ஹிந்துக்கள் தங்களுடையது என்கிறார்கள். அந்த மரங்களை சர்க்காருடைய மரங்களாகக் கருதி அந்த மரங்களை ஹரிஜனங்கள் சொந்தமாக அனுபவிக்க ஒரு நடவடிக்கையை எடுக்க அரசாங்கம் மேற்கொள்ளுமா? அதைப்பற்றி ஜில்லா கலெக்டர்களுக்கு ஒரு உத்தரவு பிறப்பிக்கப்படுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: பட்டா கொடுத்து விட்டால் பட்டா மூலமாக என்னென்ன உரிமைகள் உண்டோ அவைகள் எல்லாவற்றையும் அனுபவிக்கலாம்.

SRI N. MARUDACHALAM: ஊர் நத்தம் புறம்போக்கில் ஹரிஜனங்கள் குடியிருந்து வருகிறார்கள். அதன் பக்கத்தில் நிலச் சொந்தக்காரர்கள் இருக்கிறார்கள். அந்த நிலச்சொந்தக்காரர்கள் ஹரிஜனங்களை அந்த இடங்களைவிட்டு வெளியேற்றுவதற்கு மணியக்காரர்களின் அனுமதி பெற்று வெளியேற்ற முயற்சி செய்கிறார்கள். அப்படி முயற்சி செய்வதைத் தடுக்க அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக் கொள்ளுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: அப்படிப்பட்ட பிரயத்தனம் இருந்தால் அதைப்பற்றி முறையிட்டால் அதற்கு என்ன ஆவன செய்யவேண்டுமோ அதைச் செய்வார்கள்.

20th August 1960]

SRI T. T. DANIEL : Whereas the policy of the State Government is to assign these poramboke lands where Harijans are residing in favour of the Harijans, will the Government consider the feasibility of extending the same policy to the transferred territory where the poramboke lands are given on the basis of lease alone?

THE HON. SRI M. A. MANICKAVELU : That can also be looked into.

SRI A. VEDARATHNAM : நத்தம் என்பது குடியிருப்புக்கு என்று ஏற்பட்ட நிலம்தானே. அப்படி இருக்கும்போது குடியிருக்கிற ஹரிஜனங்களை அப்புறப்படுத்தாமல் அந்த நிலங்களை ஆர்ஜிதம் செய்து அவைகளை அவர்களுக்குக் கொடுப்பதில் என்ன தடை? ஏன் பட்டா செய்துகொள்ளக்கூடிய உரிமையை அவர்களுக்கு வழங்கக்கூடாது?

THE HON. SRI M. A. MANICKAVELU : ஹரிஜன மக்களுடைய நிலமாக இருந்து அதில் ஜாதி ஹிந்துக்கள் அனுபவித்து வந்தால் அவர்களிடத்திலிருந்து அதை வாங்கி அவர்களுக்கே பட்டா செய்து கொடுக்கப்படும். அப்படி இல்லாது வேறு நிலமாக இருந்தால், அது அரசாங்க புறம்போக்கு நிலமாக இருந்தால், அதையும் கொடுக்க ஏற்பாடு செய்யப்படும்.

SRI S. M. ANNAMALAI : சில புறம்போக்கு நிலங்களை மாற்றுவதாக இருந்தால் அந்த ஊர் பஞ்சாயத்து போர்ட் தீர்மானம் போட்டு பாஸ் செய்து தரவேண்டும். அதற்குப் பிறகு கலெக்டருக்கு அனுப்பி நிலம் மாற்றிய பிறகுதான் அங்கே குடியிருப்புக்கு பட்டா தரவேண்டும் என்ற விதி இருக்கிறது. அங்கே பஞ்சாயத்து தலைவராக இருப்பவர்கள் அத்தனை பேரும் ஜாதி ஹிந்துக்களாக இருப்பதால் ஹரிஜனங்களுக்கு சீக்கிரத்தில் நிலம் கிடைக்காமல் இருக்கிறது. ஆகவே அந்த விதிகளைத் தளர்த்தி புறம்போக்கு நிலத்தை மாற்றுவதாக இருந்தால் அந்த அதிகாரத்தை கலெக்டருக்குக் கொடுக்காமல் அங்குள்ள தாசில்தாருக்கே கொடுத்து விடவேண்டும். மற்றும் பஞ்சாயத்து தீர்மானம் போடாமல் சர்க்காரே நடவடிக்கை எடுத்துக்கொள்ளும் அளவில் விதியை மாற்றுவதற்கு தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளுவார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU : பஞ்சாயத்து தீர்மானம் போடவேண்டும் என்று சொல்வது நடைமுறையில் நடக்கிற சடங்கு. அந்தச் சடங்கின் பிரகாரம் அவர்கள் செய்கிறார்கள். அவர்கள் எழுதிய பிறகு நியாயமாக எதைச் செய்ய வேண்டுமோ அதைச் செய்யும்படி உத்தரவு போடப்படுகிறது.

*Road for Machampattu*

* 321 *Q.*—SRI N. MARUDACHALAM (on behalf of SRI V.K. KOTHANDARAMAN) : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

குடியாத்தம் தாலுகாவிலுள்ள மாச்சம்பட்டு கிராமத்திற்கு ரோடு போடும் திட்டத்தின் தற்போதைய நிலைமை என்ன?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : There is no proposal for the formation of a road to Machampattu village in any of the approved schemes. The formation of the road has to be taken up by the Machampattu Panchayat Board as the road is in the panchayat limits.

*Slum clearance scheme*

* 322 Q.—SRI P. G. MANICKAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-61-ல் சேரி ஒழிப்புத் திட்டத்தின்கீழ் எத்தனை வீடுகள் கட்ட எவ்வளவு தொகை தேவையென்று சென்னை சர்க்கார் மத்திய சர்க்காருக்குத் தெரிவித்திருக்கிறார்கள்?

(ஆ) மேற்படி திட்டத்தின்கீழ் எத்தனை வீடுகள் கட்ட எவ்வளவு தொகை தருவதாக மத்திய சர்க்கார் சம்மதித்திருக்கிறார்கள்?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) & (ஆ) The Government of India were informed that a sum of Rs. 68 lakhs would be required during 1960–61 for the construction of 496 tenements, and development of 3,055 open plots under the Slum Clearance Schemes. The amount asked for has been allotted.

SRI P. G. MANICKAM : இந்தத் திட்டத்தின்கீழ் சென்னை நகரத்தில் எத்தனை வீடுகள் கட்டப்படும்? ஒவ்வொரு நகரத்திலும் எத்தனை வீடுகள் கட்டப்படும்?

THE HON. SRI R. VENKATARAMAN : சென்னை நகரில் 496 வீடுகளும் இதர இடங்களில் 720 ஓபன் டெவலப்ட் ப்ளாட்டும்.

*Health Officers in second grade municipalities*

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் ஸ்ரீ என். கே. பழனிசாமி அவர்கள் சபையில் இல்லாததால் 323-வது கேள்வியும் பதிலும் சட்டசபையின் விவாத வெளியீட்டில் வெளியிடப்படும்.

* 323 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(a) the number of second grade municipalities in this State; and

(b) the number of Health Officers in those municipalities?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (a) Fifteen municipalities.

(b) Seven.

20th August 1960]

*Establishment of an Industrial Estate at Avadi*

• 324 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there is any proposal to establish an Industrial Estate at Avadi; and

(*b*) if so, when?

THE HON. SRI R. VENKATARAMAN : The question of establishing an Industrial Estate at Avadi during the Third Five-Year Plan period is under consideration.

SRI A. A. RASHEED : May I know the number of units that would be constructed? Will it be on the same model as Industrial Estate, Guindy?

THE HON. SRI R. VENKATARAMAN : On a bigger scale than at Guindy.

SRI M. S. SELVARAJAN : இப்பொழுது சில ஜில்லாக்களில் இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்டுகள் இருந்துகொண்டிருக்கின்றன. அப்படி இல்லாத ஜில்லாக்களில் குறைந்த பட்சம் ஒரு இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்டையாவது மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் வைக்க ஏதாவது திட்டம் இந்த அரசாங்கத்தினிடம் இருக்கிறதா?

THE HON. SRI R. VENKATARAMAN : இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலேயே எல்லா ஜில்லாக்களிலும் வைப்பதற்கு நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது, கோவை ஜில்லாவைத்தவிர. ஏனென்றால், ஈரோடில் ஏற்கனவே இண்டஸ்ட்ரியல் காலனி அமைக்கப்பட்டிருக்கிறது. ஆகவே மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் ஏற்படுத்த வேண்டும் என்ற அவசியம் இல்லை. மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் இப்பொழுது இருக்கிற இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்டுகளுக்கு எல்லாவிதமான வசதிகளையும் செய்து கொடுக்கவேண்டும் என்ற திட்டத்தை தயார் செய்து கொண்டிருக்கிறோம்.

SRI A. A. RASHEED : May I know whether the proposal to construct an industrial estate at Avadi has been included in the Third Five-Year Plan?

THE HON. SRI R. VENKATARAMAN : The State Plan has not yet been finalised. So far as Madras Government is concerned they have made up their mind that they will have the Industrial Estate at Avadi. I may give some more information. It is proposed to acquire 400 acres of land of which 100 acres would be earmarked for the proposed Industrial Estate and 300 acres will be developed as industrial site with all necessary services for enabling people to start large-scale industries.

## College of Integrated Medicine, Madras

* 326 Q.—SRI M. P. SARATHI : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னையிலுள்ள நாட்டு வைத்திய இணைப்புக் கல்லூரி (College of Integrated Medicine) -யில் போதனை முறையைத் திருத்தி அமைக்க திட்டமிடப்பட்டுள்ளதா ?

(ஆ) என்ன முறையில் எத்தகைய திருத்தம் செய்ய உத்தேசிக்கப்பட்டுள்ளது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) & (b) The Government have abolished the G.C.I.M. course in the College of Integrated Medicine with effect from the academic year 1960–61 and have admitted 75 students for the M.B.B.S. course. Candidates who have undergone the pre-professional G.C.I.M. course have also been taken in the regular M.B.B.S. course subject to their passing the Pre-professional examination to be held by the University of Madras during September 1960.

The question of starting an institution to impart instruction in indigenous systems of medicine is engaging the attention of the Government.

SRI S. M. ANNAMALAI : அந்தக் கல்லூரியைக் கலைத்ததன் காரணம் என்ன? அந்தக் கல்லூரியில் படித்த மாணவர்கள் அத்தனை பேர்களும் சேர்த்துக்கொள்ளப்பட்டிருக்கின்றார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த இரண்டு விதமான வைத்தியமுறை அங்கு இயங்குவது நல்லதா அல்லது தனித்தனியாக இருந்தால் நல்லதா என்று யோசித்து அந்த முடிவு எடுக்கப்பட்டிருக்கிறது. மற்றப்படி ப்ரி-ப்ரொபஷனல் ஜி.சி.ஐ.எம். பாஸ் செய்தவர்களை எம்.பி.பி.எஸ். க்ளாசில் சேர்த்துக்கொள்ளப்படுகிறது. அதற்கு வேண்டிய வசதி எம்.பி.பி.எஸ்.-ஸில் செய்யப்பட்டிருக்கிறது.

SRI T. S. RAMASWAMI : May I know whether the I and II year G.C.I.M. students opted to join the regular First Year M.B.B.S. course this year?

THE HON. SRI M. A. MANICKAVELU : They will all join.

SRI M. S. SELVARAJAN : ஜி.சி.ஐ.எம். கோர்சில் படித்துக் கொண்டிருந்த முதல் இரண்டு வருஷ பிள்ளைகளை எம்.பி.பி.எஸ். ரெகுலர் கோர்சில் சேர்க்கப்படுகின்றனரா அல்லது 3, 4, 5-ஆவது வருஷம் படித்துக்கொண்டிருந்தவர்களை ஷார்ட் டெர்ம் கண்டென்ஸ்ட் கோர்ஸ் ஆப் தி ரெகுலர் எம்.பி.பி.எஸ். பட்டம் பெற்று தொழில் நடத்தக்கூடிய வசதி செய்து கொடுப்பது இந்த அரசாங்கத்தின் கருத்தா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அம்மாதிரி செய்ய வேண்டும் என்று மாணவர்கள் கோரிக்கைகள் கொடுத்திருக்கிறார்கள். அவற்றையெல்லாம் செய்வதென்றால் சர்வகலாசாலை

20th August 1960]

யுடன் யோசித்துச் செய்யவேண்டியதாக இருக்கிறது. அதனால் நாங்கள் அந்தக் கோரிக்கைகளை அவர்களுக்கு சமர்ப்பித்திருக்கிறோம்.

SRI T. T. DANIEL : May I know whether it is the object of the Government to admit all the students in G.C.I.M. College to the First Year M.B.B.S. course or whether their policy is only to admit I Year and II Year students of G.C.I.M. course and if so what will be the position of those students who have completed their III Year or IV Year ?

THE HON. SRI M. A. MANICKAVELU : That is the exact question which the hon. Member opposite has just now put and I have answered it. This is a matter to be taken up with the University of Madras.

SRI K. VINAYAKAM : What is to happen to such of those who have finished their G.C.I.M. course and who are anxious to qualify themselves for M.B.B.S.? Will all of them be given an opportunity to qualify themselves for the course which would be fixed by Government or by University, at a time or in batches?

THE HON. SRI M. A. MANICKAVELU : These students joined the G.C.I.M. College with their eyes wide open and know what that course was. Now they want some facility to round up their course by a short-term condensed course. That is a matter to be considered. They cannot as a matter of right claim that.

*Kodikkarai-Vedaranyam road*

* 328. *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

1955-ம் வருடத்தில் வீசிய கொடும் புயலின்போது அனுமதிக்கப்பட்ட கோடிக்கரை-வேதாரண்யம் ரஸ்தாவேலை எப்போது துவங்கி எப்போது பூர்த்தியாகும்?

THE HON. SRI P. KAKKAN : Revised estimate for the work with reference to current schedule of rates has been technically sanctioned by the Chief Engineer (Highways) and the work is being taken up in anticipation of the approval of the Government of India for the revised estimate. It will be completed as early as possible.

SRI A. VEDARATHNAM : இந்த ரோடுக்காக மத்திய அரசாங்கத்திலிருந்து எவ்வளவு உதவி கொடுக்கப்படுகிறது? ஐந்தாண்டுகள் ஆகியும் இது இன்னும் எஸ்டிமேட் தயாரிப்பதிலேயே இருப்பதனால் இன்னும் எத்தனை ஆண்டுகளில் இது பூர்த்தியாகும்?

THE HON. SRI P. KAKKAN : மத்திய அரசாங்கம் முதலிலே நமக்குக் கொடுக்க ஒத்துக்கொண்டது நான்கு லட்சம் ரூபாய். மேலும் ஒரு லட்சத்து தொண்ணூற்று இரண்டாயிரம் ரூபாய் அதிகமாக வேண்டியிருந்தது. மறுபடியும் போடப்பட்ட ரிவைஸ்டு எஸ்டிமேட்டில் ஏழு லட்சம் ரூபாய் கொடுத்தால்தான்

[20th August 1960

மெட்டல் ரோடு போட்டு, ப்ளாக்டாப் போடுவதற்கு வசதியாக இருக்கும் என்று தெரிவிக்கப்பட்டது. இதுபற்றி மத்திய அரசாங்கத்திற்கு எழுதியிருக்கிறோம். இப்போதுள்ள நிலைமையில் வேலையை எடுத்துக்கொண்டு பிறகு வேண்டுமானாலும் அங்கீகாரம் பெறலாம் என்று இருக்கிறது.

**SRI A. VEDARATHNAM:** நான்கு லட்சத்திற்கு போடப்பட்ட திட்டமானது இப்பொழுது ஏழு லட்சமாக உயர்ந்தது. திட்டம் போட்ட காலத்திலே அதை எடுத்துக்கொண்டு அதிக காலதாமதம் செய்யாமல் அப்போதே அந்த வேலையைப் பூர்த்தி செய்திருந்தால் இத்தகைய கஷ்டம் நேர்ந்திராது அல்லவா?

**THE HON. SRI P. KAKKAN:** நான்கு லட்சம் ரூபாயில் திட்டத்தை ஆரம்பித்திருந்தால் வேலையே நடந்திருக்காது. எப்படியும் ரோடு போடுவது நான் போடுகிறோம், நல்லமுறையில் போடவேண்டும் என்பதற்காகவே காலதாமதம் செய்யப்பட்டது.

*Jeeps for Assistant Engineers*

* 329 Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI K. R. VISWANATHAN): Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether there was any proposal for supply of jeeps to each of the Assistant Engineers (Public Health) employed under the Rural Water-supply Comprehensive Programme and the Local Development Works Programme; and

(b) if so, why it was not given effect to?

THE HON. SRI M. A. MANICKAVELU: (a) Yes, Sir.

(b) The proposal was deferred for want of funds.

**SRI S. M. ANNAMALAI:** இப்படிக் கிணறுகள் வெட்ட டெக்னிகல் அசிஸ்டெண்டு வேண்டுமென்று கோரினால் அவர்கள் வந்து பார்ப்பதற்கே காலதாமதமாகிறது. அவர்களுக்கு ஜீப் இருந்தால் வேலை துரிதமாக நடைபெறும். அந்தக் காரணத்தை யொட்டியாவது அப்படிப்பட்டவர்களுக்கு ஜீப் வழங்க முன் வருவார்களா?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** எல்லோரும் ஜீப் வேண்டும் என்கிறார்கள். முக்கியமானவற்றிற்கு எல்லாம் கொடுத்து வருகிறோம். காலக்கிரமத்தில் இவர்களுக்கும் கொடுக்க ஏற்பாடு செய்கிறோம்.

*Foul smell from tanneries*

*** 330 Q.—SRI S. M. ANNAMALAI:** கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

வடஆற்காடு மாவட்டம் வாணியம்பாடிக்கு அருகாமையிலுள்ள வளையாம்பட்டு, கிரிசமுத்திரம் கிராமங்களுக்கருகில் தோல் கழுவுநீரில் துர்நாற்றத்தால் சுகாதாரம் பாதிக்கப் படுவதைத் தடுக்க அரசாங்கத்தார் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகள் யாவை?

20th August 1960]

THE HON. SRI M. A. MANICKAVELU: An experimental study is being conducted at Vaniyambadi to evolve a suitable method for the proper and satisfactory disposal of tannery effluents. As soon as a suitable method is evolved, all the tanneries will be required to adopt it.

SRI S. M. ANNAMALAI: அந்த கிராமங்களில் உள்ளவர்கள் குடிப்பதற்கே தண்ணீர் இல்லாமல் தவிக்கிறுர்கள். கிணறுகள் தோண்டினுலும் கூட அதில் இருந்து வருகிற ஊற்று நீர் துர் நாற்றம் அடிக்கிறது. நான்கைந்து ஆண்டுகளாக இதுபற்றி சர்க்காருக்குப் பல மகஜர்கள் எழுதியும் கூடச் சர்க்கார் பேசாமல் இருந்துக்கொண்டிருக்கிறுர்கள். உடனடியாக அந்தப் பிரதேசத்தில் சுகாதாரவசதி பாதிக்கப்படாமல் இருப்பதற்கும், குடிநீரின் நாற்றத்தைப் போக்குவதற்கும் முன்வருவார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU: அதற்கு ஏற்பாடு செய்து வருகிறேம். இந்த பரிட்சார்த்தம் முடிவதற்கு முன்னே கூட அந்தமாதிரியான நீரை வெளியே மைதானத்தில் டாங்கு மாதிரி கட்டி நீராவியாக்குவதற்கு ஏற்பாடு செய்கிறேம்.

*Solar energy*

* 331 Q.—SRI P. G. MANICKAM: கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) விறகுக்குப் பதிலாக சூரிய வெப்ப மூலமாகக் கிடைக்கப்படும் உஷ்ணத்தை உபயோகிப்பதற்காக யந்திரங்களைத் தயாரிக்க திட்டம் அரசாங்கத்தின் பரிசிலனையில் இருக்கிறதா?

(ஆ) அப்படியானுல், விவரங்கள் யாவை?

THE HON. SRI R. VENKATARAMAN: (அ) No, Sir.

(ஆ) Dose not arise.

SRI P. G. MANICKAM: சூரியனின் மூலமாகக் கிடைக்கும் வெப்பத்தைக்கொண்டு, வெளிநாடுகளில் பல்வேறு காரியங்கள் செய்யப்பட்டு வருவதாகத் தெரிகிறது. அதேமாதிரி நம் ராஜ்யத்திலும் நடத்துவதற்கு ஏற்பாடு செய்வார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN: இப்போது இல்லை யென்று சொன்னேன். இதைப் பரிசிலனை செய்யவேண்டு மென்ருல் டெக்னிகல் நாலட்ஜ் வேண்டும். இப்போது அதற்கு வசதிகள் இல்லை.

*Express Bus Service*

* 332 Q.—SRI N. MARUDACHALAM (on behalf of SRI N. K. PALANISAMI): Will the Hon. the Minister for Industries be pleased to state whether express buses have been introduced from Madras to Tiruchirappalli and Salem?

THE HON. SRI R. VENKATARAMAN: Yes, Sir.

SRI T. S. RAMASWAMI: May I know, Sir, whether the Hon. Minister would be pleased to state the return they get in running the express buses on these routes?

[20th August 1960

**The Hon. Sri R. VENKATARAMAN** : They are very satisfactory. The average daily collections on the Madras–Tiruchirappalli route is Rs. 631 for two buses. The average daily collections on the Madras–Salem route is Rs. 556 for two buses.

**Sri A. MARIAPPAN** : இம்மாதிரி துரிதமாக ஓடும் பஸ்களை குறுகிய ரோடுகளின் வழியாக விடுவதற்கு சர்க்கார் முயற்சி செய்யுமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : இவையெல்லாம் பெரிய பஸ்கள். குறுகிய ரோடுகளின் வழியாக விடமுடியாது. (சிரிப்பு.)

**Sri A. MARIAPPAN** : நான் குறுகிய ரோடுகளில் என்று சொன்னது ரோடுகளின் அகலத்தைப்பற்றி அல்ல. சென்னையில் இருந்து சேலத்திற்கு அனுப்பப்படும் இரண்டாவது பஸ் நீண்ட தூரம் உள்ள வழியாக எங்கெங்கோ சுற்றிப் போகிறது. இப்படிப் போகிற நீண்ட பஸ்களை குறைந்த தூரம் உள்ள ரூட் வழியாக அனுப்ப முயற்சி செய்யப்படுமா ? இதனால் பிரயாணிகளுக்குச் சௌகரியமாக இருக்கும் அல்லவா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : கனம் அங்கத்தினர் சேலத்திற்கு நேரே போவதானால் அது சௌகரியமாக இருக்கும் என்கிறார். திருக்கோவிலூர் போகிறவர்களுக்கு இது சௌகரியமாக இருக்கும். ஆகவே பொதுவாக எல்லோருடைய வசதியையும் கருத்தில் கொண்டுதான் ஒரு ரூட் ஒருவிதமாகவும், இன்னொரு ரூட் இன்னொரு விதமாகவும் வைக்கப்பட்டிருக்கிறது.

**Sri K. ANBAZHAGAN** : சென்னையிலிருந்து சேலம், சென்னையிலிருந்து திருச்சி ஆகிய இடங்களுக்குப் போகும் துரித பஸ்களின் சௌகரியத்தை உத்தேசித்து இன்னும் அதிகமாக பஸ்களை விடுவதற்கு சர்க்கார் உடனடியாக ஆலோசிக்குமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : அந்த விதமான தேவை இருந்ததால் தான் ஒரு பஸ் விட்ட ரூட்டில் இப்போது இரண்டு பஸ்கள் விடப்படுகின்றன. இன்னும் பல பகுதிகளுக்கும் இரண்டு இரண்டு பஸ்களாவது விட்ட பிறகுதான் மற்ற பகுதிகளுக்கு விடுவது பற்றி யோசிக்கப்படும்.

**Sri K. S. G. HAJA SHERIFF** : We are informed of the income that is derived from these buses. May I know, Sir, what is the corresponding expenditure for these two buses running on these routes?

**The Hon. Sri R. VENKATARAMAN** : A separate question may be put. Even then it will be very difficult to say at this time because we are calculating expenditure for every one year, where as income can be given for every day. Therefore it is not possible to give the information unless we run the buses for one year.

20th August 1960]

SRI S. RANGANATHA MUDALIAR : May I know, Sir, whether there is any proposal to extend the bus service from Tiruchirappalli to Madurai?

THE HON. SRI R. VENKATARAMAN : There is already a bus service now running from Tiruchirappalli to Nagercoil via Madurai, Tirunelveli. Another bus service is proposed to be run from Tiruchirappalli to Tuticorin and Tuticorin to Nagercoil.

SRI M. S. SELVARAJAN : இதுவரையிலும் சர்க்கார் மேற்கொண்ட துரித பஸ் சர்விஸ் மிக திருப்திகரமாக நடந்துகொண்டிருக்கிறது என்பதாக எல்லாத் தரப்பிலிருந்தும் ஆதரிக்கப்படவில்லையா? இதுபோன்று சர்க்கார் எல்லா ஜில்லாக்களையும் இணைக்க உத்தேசிக்குமா?

THE HON. SRI R. VENKATARAMAN : கேள்வியின் முதல் பகுதிக்கு கனம் அங்கத்தினர்களும், பொதுமக்களும் தான் பதில் சொல்லவேண்டும், இந்த துரித பஸ்கள் திருப்திகரமாக இருக்கின்றனவா இல்லையா என்பது பற்றி, இரண்டாவது பகுதிபற்றி, —நமது நிதி நிலை, மக்களுடைய தேவை இவற்றைப் பொறுத்து தேவையுள்ள இடத்தில் விஸ்தரிக்கப்படும்.

SRI M. A. B. ARUMUGHASAMY : திருச்சியிலிருந்து தூத்துக்குடி செல்லும் துரித பஸ்கள் எந்த மார்க்கமாக விடப்படும்? இப்போது ஒன்று திருச்சியில் இருந்து மேலூர் வழியாக செல்கிறது. இன்னொன்றை திண்டுக்கல் வழியாக விடுவதற்கு உத்தேசித்திருக்கிறார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN : அப்படித்தான். இப்போது தூத்துக்குடி போகும் பஸ் திண்டுக்கல் வழியாகச் செல்லும். அது அங்கிருந்து அருப்புக்கோட்டை வழி செல்லும்.

SRI D. S. AUTHIMOOLAM : இரண்டு பஸ்கள் ஓடும்போதே அதிக வருமானம் வருகிறது. ஆகவே அடுத்த ஜெனரல் எலெக்ஷனுக்குப் பிற்பாடாவது எல்லா முனிசிபாலிடி பஸ்களை எல்லாம் சர்க்கார் விடுவதற்கு முன்வருவார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN : தேர்தல் வரைக்கும் காத்துக் கொண்டிருக்க வேண்டியதில்லை. ஆனால் ஒரு சமாசாரம் கனம் அங்கத்தினருக்குச் சொல்ல விரும்புகிறேன். சிடி சர்விஸ் வருமானம் குறைவு. சென்னையில் கூட ஒரு பஸ்ஸுக்கு 88 ரூபாய் வரைக்கும்தான் வரும். ஆனால் இதிலே 250 ரூபாய் வரையில் வரும்.

SRI K. VINAYAKAM : Is it a fact that there is a great demand for reservation of the seats even before two or three days before the journey is commenced? In such event, is it possible to distribute biscuits and small things to munch for the passengers on the way, and if not, at least meals packets at the junctions where the bus is halted?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, the services depend on the rates charged. If further services are required, probably we will have to increase the fares. But I may assure the

hon. Member that we are taking every step to provide adequate facilities for food and other snacks service on the way. We are taking the passengers to rest places and then providing them with amenities.

SRI A. A. RASHEED : May I know whether there is any proposal to air-condition these express buses?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, that is my dream. I would like to have all the long distance buses in the State air-conditioned. But I gather from some of the people who are working these air-condition buses that the cost is prohibitive. According to me, it should not cost more than Rs. 75,000 per bus including the chassis, the body and the air-conditioning plant. Since there are not competitive tenders for that sort of thing, it may have to wait.

SRI B. K. LINGA GOWDER : Is there any proposal to extend the service from Salem to Ootacamund?

THE HON. SRI R. VENKATARAMAN : I cannot answer about all the proposals.

MR. SPEAKER : If every hon. Member asks whether the service will be extended from Salem to his village, where is the end?

9-00 a.m. SRI V. SUBBIAH : இந்த அதிக பஸ்களை விடுவதற்கு தென்னாட்டிலுள்ள மிகவும் முக்கியமான இராமேஸ்வரம் போன்ற க்ஷேத்திரத்திற்கு ஏன் ஏற்பாடு செய்யக்கூடாது என்று அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : இப்போதுதான் கனம் மந்திரி அவர்கள் பதில் சொன்னார்களே.

*Homœopathy, Siddha and Unani systems of medicine*

* 333 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. P. SARATHI) : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவு செய்து கிழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

இந்த ராஜ்யத்தில் ஹோமியோபதி, சித்த, யுனானி வைத்திய முறைகளை ஊக்குவிக்க அரசாங்கம் என்ன நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : A statement[a] is placed on the table of the House.

SRI S. M. ANNAMALAI : ஹோமியோபதியைப் பொறுத்த வரையில் இந்தக் கமிட்டியானது அறிக்கை தயாரித்து சர்க்காருக்குக் கொடுத்துவிட்டதென்றும், சர்க்கார் பரிசீலித்துக் கொண்டிருக்கிறதென்றும், அஷ்யூரன்ஸ் கமிட்டியில் கூட தெரிவிக்கப்பட்டது. இந்தப் பரிசீலனை எவ்வளவு காலத்திற்குள் முடியும்

a Printed as Appendix I on pages 285-286 infra.

20th August 1960]

என்று கனம் அமைச்சர் அவர்கள் தெரிவிப்பார்களா? இந்தக் கமிட்டி தன்னுடைய அறிக்கையை சர்க்காருக்கு அனுப்பியிருந்தும் அதை பரிசிலனை செய்ய சர்க்காருக்கு என் இவ்வளவு கால தாமதம் ஏற்படுகிறது என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இதற்குள்ளே இன்னொரு குழுவும் ஏற்படுத்தி, அவர்களுடைய அறிக்கையையும் எதிர்ப்பார்க்கப்படுகிறது. இம்மாதிரி விஷயங்களில் எல்லாம் கொஞ்சம் காலதாமதம் செய்தால்தான் நன்றாக ஆராய முடியும்.

SRI K. ANBAZHAGAN : இப்பொழுது குறிப்பிடப்பட்டிருக்கிற மருத்துவத் துறையிலே, சித்தவைத்திய முறையைப் படிப்பதற்கு இருக்கும் வாய்ப்பை இழந்திருக்கிறது. ஆகையால் சென்னையில் ஒரு சித்த வைத்தியக் கல்லூரியைத் தோற்றுவிப்பதற்கு ஏற்பாடு செய்வார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : சித்த வைத்திய முறை மாத்திரம் அல்ல, ஆயுர்வேதம், யுனானி முதலிய வைத்திய முறைகளும் ஆரம்பிக்க உத்தேசம் இருக்கிறது.

*Library cess*

* 334 Q.—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லாவில் நூல் நிலையத்திற்கான செஸ் (cess) கடந்த மூன்று வருஷங்களில் ஆண்டுதோறும் எவ்வளவு வசூலாகியது?

(ஆ) ஆண்டு தோறும் இந்த இனத்தில் செலவாகிய தொகை எவ்வளவு?

(இ) இந்த ஜில்லாவில் எத்தனை நூல் நிலையங்கள் எங்கெங்கே இருக்கின்றன?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) to (இ) A statement [a] is laid on the table of the House.

SRI A. VEDARATHNAM : இந்த நூல் நிலையத்திற்காக வசூல் செய்யப்படுகின்ற செஸ் நிதியிலிருந்து புஸ்தகங்களை வாங்குவது மட்டுமல்லாமல் இன்னும் கட்டிடங்கள் கட்டுவதற்கும், மேஜை நாற்காலிகள் வாங்குவதற்கும் இந்த நிதியிலிருந்து செலவு செய்கிறார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த நிதியிலிருந்து கட்டிடங்கள் கட்டுவதற்கு சில இடங்களில் உபயோகப்படுத்தப் படுகின்றன. இன்று மேஜை, நாற்காலிகள், பத்திரிகைகள் வாங்குவதற்கும் சம்பளம் கொடுப்பதற்கும் உபயோகப்படுத்தப் படுகின்றன.

---

a Printed as Appendix II on pages 286-291 infra.

[20th August 1960

*Co-operative Credit Societies*

MR. SPEAKER : இந்தக் கேள்வியைக் கொடுத்த கனம் அங்கத்தினர் ஸ்ரீ கே. ஆர். விஸ்வநாதன் அவர்கள் இடத்தில் இல்லாததால், கேள்வியும் பதிலும் சட்டசபை விவாத வெளியீட்டில் அச்சிடப்படும்.

* 335 Q.—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) whether the Government have received any petition, dated 23rd June 1960, from the villagers of Mudukulam, Pudupalayam and other adjacent hamlets for permission to organize a co-operative credit society or a marketing society for these villages; and

(b) if so, the action taken thereon?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) & (b) The information is being collected and will be placed on the table of the House in due course.

*Male nurses*

* 336 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் வேலை செய்யும் ஆண் நர்சுகளுக்கு எத்தனை மணி நேரம் வேலை செய்யவேண்டுமென்று உத்தரவு போடப்பட்டுள்ளது?

(ஆ) ஒரு மாதத்தில் எத்தனை நாட்களுக்கு விடுமுறை தரப்படுகிறது?

(இ) எத்தனை நாட்களுக்கு ஒரு முறை இரவு பகல் வேலை என்று மாற்றித் தரப்படுகிறது?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) The working hours for both men and women nurses are as follows :—

*Hours of duty for day-duty—*

7 a.m. to 12 noon }
1 p.m. to 4 p.m. } 8 hours.

or on alternate days—

7 a.m. to 1 p.m. }
4 p.m. to 7 p.m. } 9 hours.

one afternoon (3 hours) is given off duty per week.

*Hours of duty for night-duty—*

7 p.m. to 7 a.m. with one hour rest during the night=11 hours.

(ஆ) One day per month is allowed in addition to weekly afternoon. One night off only per month is given to night duty nurses.

20th August 1960]

(இ) All nurses get night duty by turn, usually for one month at a time, the average ratio being one month night duty to 3–4 months day duty.

In hospitals with small staff the frequency of night duty is higher.

SRI S. M. ANNAMALAI : சார், இதை மாற்றி அமைக்க வேண்டுமென்று அவர்களிடமிருந்து கோரிக்கைகள் ஏதாவது சர்க்காருக்கு வந்ததா? அப்படியானால் என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டது?

THE HON. SRI M. A. MANICKAVELU : கோரிக்கை வந்ததாக தகவல் இல்லை. இதுமாதிரி சலுகை சில மாதத்திற்கு முன்பு கொடுக்கப்பட்டது. அதாவது வீக்லி ஆப் போன்ற சலுகை கொடுக்கப்பட்டது.

SRI K. ANBAZHAGAN : இந்த மேல் நர்ஸ்களாக இருப்பவர்களுக்கு வார விடுமுறை எதுவும் இல்லாத காரணத்தால், இப்போது அவர்களுக்கு அளிக்கப்படுகின்ற பணிகள் அதிக வேலை தருவதாக இருப்பதால், அரசாங்கம் இன்னும் அதிகமான சலுகை தருவதற்கு முன் வருவார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU : ஆண் நர்ஸ்ஸுகளும், பெண் நர்ஸ்ஸுகளும் ஒரேவிதமான கடமைகளைச் செய்கிறார்கள். அவர்களுக்கு வீக்லி ஆப் கொடுத்துக்கொண்டிருக்கிறார்கள். சர்க்கார் இம்மாதிரி செய்கின்ற காரணத்தினால் எத்தனையோ லட்ச ரூபாய் இதற்காக செலவாகிறது.

SRI M. K. SOMASUNDARAM : நர்சுகளுக்கெல்லாம் டூடி இருக்கும் நேரத்தில் கிளாசும் வைத்துவிடுகிறார்கள். அதனால் அவர்கள் கிளாசுக்குப் போகமுடியாமல் ஆப்சன்ட் ஆகக்கூடிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. ஆகையால் அவர்களுக்கு டூடியைக் குறைத்து கிளாசுக்கு போவதற்கு வகை செய்வார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இதன் மூலக்கேள்வி ஸ்டாப் நர்ஸ்ஸுகளைப் பொறுத்தது. இப்பொழுது கனம் அங்கத்தினர் கேட்கும் கேள்வி மாணவர்களைப் பொறுத்தது.

*Schools Re-organization Conferences*

*337 Q.—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பள்ளிச் சீரமைப்பு மகாநாடுகள் 1960-ம் வருஷத்திலே எத்தனை நடைபெற்றன?

(ஆ) இம் மகாநாடுகளை நடத்தப் பிரயாசைப்படும் உபாத்தியாயர்களிலே சிறந்த தொண்டாற்றுபவர்களுக்கு பரிசுகளும் அத்தாட்சிப் பத்திரங்களும் கொடுப்பது பற்றி அரசாங்கத்தால் பரிசீலனை நடத்தப்பட்டு வருகிறதா?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Forty up to 4th May 1960.

(b) No, Sir.

*Wattle-bark*

* 338 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of Sri M. P. SARATHI) கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இந்த இராஜ்யத்தில் தோல் பதனிடுவதற்கு தேவையான (Wattle-barks) பட்டைகள் கிடைக்கின்றனவா?

(ஆ) இந்தப் பட்டைகள் வெளியிலிருந்தும் இறக்குமதி செய்யப்படுகின்றனவா?

(இ) காலாகாலத்தில் போதிய அளவு கிடைக்காததால் அந்தத் தொழில் பாதிக்கப்படுவதாக அரசாங்கத்திற்குத் தகவல் உண்டா?

(ஈ) அதன்மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) No, Sir.

(ஆ) Wattle-barks are imported from East Africa and other countries.

(இ) & (ஈ) It has been represented that the cultivation of wattle trees should be extended. The Government are taking suitable steps in this direction.

SRI V. SUBBIAH : இதுமாதிரி வாட்டில் பட்டை எல்லாம் பற்றுக்குறை இருப்பதினாலும், ஆவாரம்பட்டை அதிகமாக கிடைப்பதனாலும் ஆவாரம்பட்டையை அதிகமாக உபயோகப் படுத்துவதற்கு அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்போது சென்னை ராஜ்யத்தில் ஆவாரம்பட்டை டான்னிங்கிற்கு உபயோகப்படுத்தப் படுகிறது.

*Construction of bridges in Tiruturaipundi taluk*

* 339 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லாவில் கள்ளிமேடு, வாண்டுவாஞ்சேரி கோஸ்டல் ரோடிலுள்ள இரு பாலங்களும் சாங்ஷனாகி பல ஆண்டுகளாகியும் இன்னும் வேலையேதும் துவங்காமலிருப்பதன் காரணமென்ன? இவைகள் எப்போது துவங்கி எப்போது பூர்த்தியாகும்?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : *Kallimode Bridge.*—The contract was accepted finally on 11th March 1960 and preliminary arrangements are being made to commence the work shortly.

20th August 1960]

*Vanduvancheri Bridge*—The work could not be started due to a dispute in site in question. The site has since been fixed. The work will be taken up for execution as soon as the detailed plan and estimates which are under scrutiny are technically sanctioned.

SRI A. VEDARATHNAM : இப்பொழுது கள்ளிமேடு, வாண்டு வாஞ்சேரி கோஸ்டல் ரோட்டில் பாலங்கள் நிறுவுவதற்கு நிச்சயமாகி விட்டதா ? அதற்கு பிளான், எஸ்டிமேட் தயாராகி விட்டதா ? அப்படியானால் டெண்டர்கள் 'கால்பார்' செய்து விட்டார்களா ? வேலை எப்பொழுது துவங்கப்படும் ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : எஸ்டிமேட் 70 ஆயிரம் ரூபாய் என்று இருக்கிறது. அதற்கு டெக்னிகல் சாங்ஷன் வந்த பிறகு வேலை துவக்கப்படும்.

*Loans to agriculturists*

* 340 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு மாவட்டத்தில் விவசாயிகளுக்குக் கொடுத்த சர்க்கார் கடன் பாக்கியை 1368, 1369-ம் பசலிகளுக்கு வற்புறுத்தி வசூலிப்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

(ஆ) அப்படியாயின் இதுவரை எத்தனை ஜப்திகள் செய்யப் பட்டன ?

(இ) ஒரு பசலி பாக்கியை மட்டும் வசூலிக்க உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) & (ஆ) No representation has so far been received by the Government. Out of 11,761 cases in which No. 1 Notice was issued for fasli 1368, only in 212 cases attachment was made. For fasli 1369, out of 33,351 cases, attachment was made in 331 cases only.

(இ) No, Sir.

SRI S. M. ANNAMALAI : இதற்கு முன்னால் தக்காவி கடன் மானுயல் பிரகாரம் ஒரு பசலிக்கு கிஸ்தி கொடுக்கமுடியாமல் ஒத்திப்போட்டுவிட்டு, ஐந்து வருஷத்திற்குப் பிறகு வசூலிக்க வேண்டுமென்று இருந்தது. சர்க்கார் இப்பொழுது அதைத் திருத்தியிருக்கிறார்கள். ஆனால் ஒரு பசலிக்குக் கொடுக்க வேண்டிய கிஸ்தி ஒத்திப்போட்டுவிட்டால் அதை அடுத்த வருஷத்தில் வசூலிக்கிறார்களா ? அவ்வாறல்லாமல் முன் இருந்த மாதிரி செய்வதற்கு அரசாங்கம் யோசனை செய்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்தமாதிரி கடன் கொடுத்து வசூல் செய்வதிலே பருவமழை இல்லாவிட்டால் அப்பொழுது வசூல் செய்ய முடிவதில்லை. அப்பொழுது ஒத்திப் போடப்படுகிறது. இம்மாதிரி ஒத்திப் போடுவதால் சில

[20th August 1960

இடங்களில் மூன்று நான்கு வருஷங்கள் பாக்கிகள் நின்று விடுகின்றன. ஆகையால் இப்பொழுது நடைமுறை வருஷத்திற்கும், பழைய பாக்கியில் ஒரு பகுதியையும் சேர்த்து வசூல் செய்கிறார்கள்.

*Women teachers*

*** 341 Q.—SRI P. G. MANICKAM:** கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) ஆரம்பப் பள்ளிக்கூடங்களிலே 1 முதல் 3-ஆம் வகுப்பு வரைக்கும் பெண்களையே ஆசிரியைகளாக நியமிக்கும் திட்டம் அமுலாக்கப்பட்டு வருகிறதா?

(ஆ) அப்படியாயின் எத்தனை உபாத்தியாயினிகள் தற்போது அமர்த்தப்பட்டிருக்கிறார்கள்?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** (அ) There is no proposal to appoint only women as teachers for standards I to III in elementary schools.

(ஆ) Does not arise.

**SRI P. G. MANICKAM:** வொயிட் பேப்பரை ஆராய்ச்சி செய்ய நியமிக்கப்பட்ட சட்டசபைக் குழுவினர் இவ்வாறு ஒன்று முதல் மூன்றாவது வகுப்பு வரை பெண்களை ஆசிரியர்களாகப் போடுவது நல்லது என்று சர்க்காருக்கு தெரிவித்து இருக்கிறார்கள். அப்படிச் செய்தால், குழந்தைகளின் நடவடிக்கைகளை அறிந்து பெண்கள் வேலை செய்வார்களாதலால், இதனால் படிப்பின் தரமும் அதிகரிக்கும். ஆதலால் இதுபற்றி சர்க்கார் மீண்டும் கவனம் செலுத்துமா?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** கூடிய வரையில் பெண் ஆசிரியர்கள் நியமிக்கப்படுகிறார்கள்.

*Statute of V. O. Chidambaram Pillai*

*** 343 Q.—SRI S. M. ANNAMALAI:** கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) சென்னை கடற்கரையில் வ. உ. சிதம்பரனார் சிலை வைக்க உத்தேசம் உண்டா?

(ஆ) மேலும் என்னென்ன சிலைகள் வைக்க திட்டம் உள்ளது?

**THE HON. SRI P. KAKKAN:** (*a*) & (*b*) No, Sir.

**SRI S. M. ANNAMALAI:** நமது தமிழ்நாட்டில் கப்பல் ஓட்டிய தமிழரின் பெயர் நிலைத்திருக்க வேண்டியாவது இந்த சர்க்கார் மறு பரிசீலனை செய்து சிதம்பரனார் அவர்களின் சிலையை கடற்கரையில் வைக்க முன்வருவார்களா?

20th August 1960]

THE HON. SRI P. KAKKAN : செக்கிழுத்த செம்மல், கப்பலோட்டிய தமிழன் வ. உ. சிதம்பரனாரின் ஞாபகார்த்தமாக மக்கள் தெரிந்து கொள்வதற்காக, அவர்கள் எங்கு பிறந்து வளர்ந்தாரோ அந்த இடத்தை வாங்கி அங்கு சிற்ப கலையுடன் வீடு கட்டி, மக்கள் அறிந்து கொள்ளும்பொருட்டு அதை ஒரு ஞாபகார்த்த சின்னமாக வைக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

*Supply of clothing to Harijan students*

* 344 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-61-ல் ஹரிஜன மாணவர்களுக்கும், மாணவிகளுக்கும் உடைகள் வழங்குவதற்காக ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை எவ்வளவு ?

(ஆ) எத்தனை பேர்களுக்கு உடைகள் வழங்கப்படும் ?

THE HON. SRI P. KAKKAN : (அ) The question of sanctioning an allotment for supply of clothing to Harijan pupils during 1960–61 is still under consideration.

(ஆ) Does not arise.

SRI P. G. MANICKAM : தற்போது கல்வி இலாகா மூலம் எல்லா ஆரம்பப் பள்ளிகளில் படிக்கும் மாணவர்கள் எல்லோரும் ஒரே விதமான உடை உடுத்தி வருவது நல்லதென்று ஒரு யோசனை இருந்து வருவதாகத் தெரிகிறது. அப்படிப்பட்ட யோசனை வரும்போது, ஹரிஜன குழந்தைகள் அப்படி ஒரேவிதமான உடை உடுத்தி வரமுடியாத நிலையில் இருப்பதால், எல்லா ஆரம்பப் பள்ளிகளில் படிக்கும் ஹரிஜன குழந்தைகளுக்கு இலவசமாக உடை வழங்குவதுபற்றி ஹரிஜன நல இலாகா பரிசீலனை செய்யுமா ? அரசாங்கம் இதுபற்றி பரிசீலனை செய்து ஒரு நல்ல முடிவிற்கு வருவார்களா ?

THE HON. SRI P. KAKKAN : கல்வி அமைச்சர் அவர்களும், நானும், இதர அதிகாரிகளும் பரிசீலனை செய்து, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஆரம்பப் பள்ளிகளில் படிக்கிற எல்லா ஹரிஜன பெண் குழந்தைகளுக்கும் உடை வழங்குவது என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

*Minor ports*

* 345 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதில் அளிப்பாரா—

(அ) எந்தெந்த சிறிய துறைமுகங்களில் கடல் மார்க்கம் போக்கு வரத்து நடைபெற்று வருகின்றன ?

(ஆ) பாக்கி துறைமுகங்களையும் போக்கு வரத்துக்குப் பயன் படுத்தும் உத்தேசம் அரசாங்கத்திற்கு உண்டா ? அப்படியானால், அதன் விவரமென்ன ?

(இ) சிறிய துறைமுகங்கள் (**minor ports**) நிதியில் இருக்கும் தொகை எவ்வளவு?

THE HON. SRI P. KAKKAN : (அ) Coastal traffic is carried on at the ports of Cuddalore, Nagapattinam, Tuticorin, Pamban, Dhanushkodi, Kilakarai, Tondi, Colachel, Kulasekarapattinam and Porto Novo.

(ஆ) No, Sir.

(இ) Rupees six lakhs forty-five thousand and fifty-nine as on 1st April 1960.

SRI A. VEDARATHNAM : இந்தச் சிறிய துறைமுகங்கள் சங்க காலம் முதல் நம் நாட்டில் போக்குவரத்திற்காக உபயோகப் படுத்தப்பட்டு வந்திருக்கின்றன. வெள்ளைக்காரர்கள் தங்கள் சொந்த லாபத்திற்காக இவைகளையெல்லாம் மூடினார்கள். நமது சுதந்திர சர்க்கார் இந்த சிறு துறைமுகங்கள் அனைத்தையும் திறந்து போக்குவரத்திற்கு லாயக்குள்ளதாக செய்து ஒரு கோஸ்டல் ஸ்டீம் சர்வீஸ் ஏற்படுத்தி அதன் மூலம் "டிராபிக் கன்ஜெஷனை" குறைக்க அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI P. KAKKAN : தனி கேள்வி போட்டால் இது சம்பந்தமாக பதில் சொல்கிறேன்.

SRI K. S. G. HAJA SHERIFF : Sir, will the Government kindly place before this House information relating to the volume of traffic handled by these coastal ports?

THE HON. SRI P. KAKKAN : A separate question may be put.

SRI V. SUBBIAH : இந்த மைனர் போர்ட்களில், வெம்பார் என்ற துறைமுகத்திலிருந்து தூத்துக்குடிக்கு விறகும், மதுரை போன்ற பெரிய நகரங்களுக்கு பனை வெல்லமும் பெருமளவிற்கு ஏற்றுமதியாகிறது. அதையெல்லாம் இந்த மைனர் போர்ட்டின் கீழ் கொண்டுவர முடியுமா?

THE HON. SRI P. KAKKAN : அதுபற்றி என்னிடம் தகவல் இல்லை.

SRI K. SATTANATHA KARAYALAR : குளச்சல் கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ளது. அங்கிருந்து, டிரான்ஸ்பார்ட் டெரிட்டரி மைனர் போர்ட் பண்டிலுள்ள பணம் எவ்வளவு வந்தது? அதோடு தொடர்ந்து இப்பொழுது எவ்வளவு இருக்கிறது?

THE HON. SRI P. KAKKAN : சிறு போர்ட்கள் பொறுத்த வரை ஒவ்வொரு போர்ட்டிலிருந்து வருவது அந்தந்த போர்ட்டிற்கு என்றில்லை. எல்லாவற்றையும் சேர்த்து காமன் பண்டாய் வைக்கப்படுகிறது.

20th August 1960]

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, may I know how much amount is spent annually for the improvement of these minor ports?

THE HON. SRI P. KAKKAN : வருடாவருடம் 18,15,067 ரூபாய் வருவாய் வருகிறது. 18,46,252 ரூபாய் செலவாகிறது.

SRI T. T. DANIEL : Sir, may I know whether the Government are having now any scheme to improve these minor ports for increasing the coastal trade?

THE HON. SRI P. KAKKAN : We are taking up schemes one by one.

SRI M. S. SELVARAJAN : Is there any phased programme for the development of these minor ports listed and can the Government be pleased to give details?

THE HON. SRI P. KAKKAN : If the hon. Member puts a separate question, I will answer it.

SRI K. ANBAZHAGAN : இந்தச் சிறு துறைமுகங்கள் பலவற்றில் இப்பொழுது ஏற்றுமதி இறக்குமதி குறைந்து போயிருக்கிற காரணத்தினால் அந்த வட்டார மக்கள் தொழிலற்றுப் போய் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆகவே அந்தந்த துறைமுகங்களில் உள்ள ஏற்றுமதி, இறக்குமதி அதிகமாவதற்கு அரசாங்கத்தினிடம் ஏதாவது திட்டமிருக்கிறதா ?

THE HON. SRI P. KAKKAN : எங்கெல்லாம் ஏற்றுமதி, இறக்குமதியாகிறதோ அவைகளை பரிசீலனை செய்து நல்ல வருவாய் வரும் நிலையிலுள்ள, ஏற்றுமதி அதிகமாக நடத்தக்கூடிய துறைமுகங்களை எல்லாம் அபிவிருத்தி செய்ய அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறது. ஏற்றுமதி செய்யும்போது ஏற்றுமதி செய்கிற பொருள்களுக்கு ஒரு ரேட் பிக்ஸ் செய்து ஏற்றுமதியை அதிகரிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

SRI K. S. G. HAJA SHERIFF : In view of the fact that lighter fleet is necessary for the successful functioning of a minor port, will the Government consider the question of giving loans on easy repayment terms to boat-owners or other people who want to construct boats or lighters?

THE HON. SRI P. KAKKAN : A separate question may be put.

*Houses for Harijans*

* 346 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ல் வடாற்காடு மாவட்டத்தில் எந்தெந்த கிராமங்களில் ஹரிஜனங்களுக்காக வீடுகள் கட்டி தரப்படும் ?

[20th August 1960

(ஆ) இதைக் குறித்து மாவட்டத்திலுள்ள எல்லா சட்ட மன்ற உறுப்பினர்களேயும் கலந்து ஆலோசிக்கப்பட்டதா ?

(இ) இல்லேயாயின் அதற்கான காரணங்கள் யாவை ?

THE HON. SRI P. KAKKAN : (அ) Fifteen villages, namely :—

Ponnanthangal.
Murugapadi.
Tirumalai.
Turinajapuram.
Kakkanampalayam.
Kasinaikenpatti.
Kandili.
Peddur.
Somasamudram.
Koorambadi
Mamandoor.
Kumbinipettai.
Palli
Ananganallur.
Anaicut.

(ஆ) & (இ) The Collector has issued instructions to the Block Development Officers and Tahsildars to consult the local M.L.As. and M.Ps. and obtain their views before the names of villages are suggested so that their views may also be considered. The list of villages selected for the year was however got approved by the District Harijan Welfare Committee at its meeting on 28th April 1960.

SRI S. M. ANNAMALAI : இங்கு சட்டமன்றம் நடந்து கொண்டிருந்தபோதிலும் அங்கு கலெக்டர் அவர்கள் கூட்டத்தைக் கூட்டி அந்த முடிவு எடுத்துவிட்டார்கள். சட்டமன்ற அங்கத்தினர்களேக் கலந்து முடிவு எடுக்கப்பட்டது என்று சொல்வது அவ்வளவு பொருத்தமல்ல. வேண்டுமானல் மற்ற சட்டமன்ற அங்கத்தினர்களேக் கேட்டுப்பாருங்கள். ஆகவே இப்படி ஒரு முக்கியமான பிரச்னே வரும்போது சட்டமன்ற அங்கத்தினர்களேக் கலந்துதான் செய்யவேண்டுமென்று சர்க்கார் கண்டிப்பாக உத்தரவு போடுவார்களா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் அவர்களுக்கு சட்டமன்றம் கூடுவதற்கு முன்பாகவே நோட்டீஸ் போய் இருக்குமென்று கருதுகிறேன். எப்படியிருந்தாலும் ஏழைகளுக்கு நன்மை ஏற்படுகிறது. அன்றையதினம் ஆஜராகி நல்ல காரியத்தில் பங்கு கொள்ளவேண்டும், கொண்டிருக்க வேண்டுமென்று நினேக்கிறேன்.

*Medical Graduates*

* 347 Q.—SRI P. G. MANICKAM : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ம் ஆண்டில் தேர்ச்சி பெற்ற மருத்துவப் பட்டதாரிகள் எத்தனே பேர்கள் ?

(ஆ) இவர்களுள் எத்தனே பேர்கள் அரசாங்க ஸ்காலர்ஷிப் மூலமாகப் படித்தவர்கள் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ)&(ஆ) A statement* is placed on the table of the House.

---

* Printed as Appendix III on page 192 infra.

20th August 1960]

SRI P. G. MANICKAM : ஸார், மேஜை மீது வைக்கப் பட்டிருக்கும் குறிப்பில் 1960-ம் ஆண்டில் அரசாங்க ஸ்காலர் ஷிப் பெற்றவர்கள் 27 ஆண்களும், 9 பெண்களும் என்று சொல்லப் பட்டிருக்கிறது. அவர்களுக்கு இந்த அரசாங்கத்திலுடைய பணத்தைத்தான் வைத்தியப்படிப்புக்காகக் கொடுத்திருக்கிறோம். ஆகவே இவர்கள் தேச சேவை செய்ய முன் வரக்கூடாதா ? இவர்கள் எல்லாம் தேச சேவை செய்ய முன் வரவேண்டும் என்று அரசாங்கம் அழைப்பு அனுப்புமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதில் ஒரு நிர்ப்பந்த மான ஏற்பாடு செய்ய வேண்டியிருக்கிறது. இதை ஸ்காலர்ஷிப் கொடுக்கும்போது செய்ய வேண்டும். இந்த நிபந்தனையைக் கொண்டு வரலாமா என்பது பற்றி ஆலோசனை நடந்து கொண்டி ருக்கிறது.

*Drainage facilities for certain lands*

* 348 Q.—SRI A. VEDARATHNAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மன்னார்குடி தாலுக்கா தென்கரை கிராம வாசிகளிட மிருந்து திருமேனியாறு பாயும் நிலங்களுக்கு வடிகால் வசதி கோரி அரசாங்கத்திற்கு விண்ணப்பம் வந்ததா ?

(ஆ) அப்படியாயின் அதன்பேரில் அரசாங்கம் எடுத்த நட வடிக்கை என்ன ?

THE HON. SRI P. KAKKAN : (அ) A representation was received by the Executive Engineer, Grand Anicut Canals Division, in April 1958, from the villagers of Thenparai.

(ஆ) It is reported that the channel requires widening and strengthening of banks involving land acquisition. The improvement work will be taken up under Special Minor Irrigation Programme.

SRI A. VEDARATHNAM : ஸார், தஞ்சை ஜில்லாவில் இந்த கடலோரப் பகுதிகளில் இருக்கின்ற எல்லா கிராமங் களிலும் மழை காலம் வரும்போது கிராமங்களில் எல்லாம் தண்ணீர் வந்து நிரம்பி விடுகிறது. அதே சமயத்தில் காவேரியில் தண்ணீர் விடும்போதும் அதிகமாக தண்ணீர் வந்து வீடுகள் எல்லாம் தண்ணீரில் மூழ்கிவிடுகின்றன. இதைப்பற்றி நூற்றுக் கணக்கான மகஜர்கள் அரசாங்கத்திற்கு வந்திருக்கின்றன. ஆகவே இந்தக் கஷ்டத்தை நிவர்த்தி செய்ய வடிகால் வசதியைப் பெருக்க அரசாங்கம் உடனடியாக ஏதாவது முயற்சி செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : உண்மையிலே கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லுகின்ற மாதிரி பல கிராமங்களும், நிலங்களும் பாதிக்கப்படுகின்றன. இதைப்பற்றி நான் அங்கு சென்றிருந்த

[20th August 1960

போது நேரில் கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். இதைப்பற்றி அரசாங்கம் பரிசீலனை செய்து, இதை மைனர் இரிகேஷன் ஸ்கீமோடு சேர்த்து நல்ல முறையில் வடிகால்களை எல்லாம் ரிப்பேர் செய்வதற்குத் திட்டமிடப்பட்டிருக்கிறது.

*Houses for the residents of Javadhu Hills*

* 349 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ல் போளூர் தாலுகா ஜவ்வாது மலைவாசிகளுக்கு எத்தனை வீடுகள் கட்டித்தரப்படும்?

(ஆ) 1958, 1959 ஆண்டுகளில் எத்தனை வீடுகள் கட்டித் தரப்பட்டன?

(இ) இல்லையாயின் காரணமென்ன?

THE HON. SRI P. KAKKAN : (அ) The programme has not yet been finalised.

(ஆ) and (இ) No house was constructed for the hill tribes in the Javadhu Hills of Polur taluk during 1958–59 in view of the limited funds allotted for the scheme.

SRI S. M. ANNAMALAI : ஸார், மலைவாசிகளுக்காக பணங்கள் ஒதுக்கப்பட்டும் செங்கம் தாலுகாவுக்கும் திருப்பத்தூர் தாலுகாவுக்கும் இந்த வசதி செய்யப்படுகிறதே தவிர போளூர் தாலுகாவைப்பற்றி கவனிப்பதே இல்லை. இம்மாதிரி காரியங்களில் சட்டமன்ற உறுப்பினர்களைக் கலந்து ஆலோசிப்பதே கிடையாது. ஒதுக்கப்படுகின்ற பணங்கள் எல்லாம் எல்லா தாலுகாக்களுக்கும் சரிசமமாகக் கொடுப்பதற்குரிய வகையில் சர்க்கார் ஏதாவது ஏற்பாடு செய்வார்களா?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் அவர்கள் ஏற்கனவே இந்த சபையில் சொல்லியிருக்கிறார்கள். போளூர் தாலுகாவில் போதிய வீடுகள் கட்டப்படவில்லை என்பதைச் சொல்லியிருக்கிறார்கள். இதைப்பற்றி அரசாங்கம் ஆலோசனை செய்து அங்கே வீடு கட்டுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. பொதுவாக எம்.எல்.ஏ.-க்கள், எம்.எல்.ஸி-க்கள் இவர்களை எல்லாம் கலந்துதான் ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. கனம் அங்கத்தினர் அவர்களும் அங்குள்ள அதிகாரிகளைச் சந்தித்து தொடர்பு வைத்துக்கொள்ளும் வாய்ப்பினை ஏற்படுத்திக்கொண்டால் நல்லது என்று நினைக்கிறேன்.

*Parambikulam and Cauvery river waters*

* 350 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பரம்பிக்குளம், காவிரி ஆறுகளின் தண்ணீரைப் பகிர்ந்து கொள்வது பற்றி ஏப்ரல் மாதம் நடந்த தென் மண்டலக் கவுன்சில் கூட்டத்தில் விவாதிக்கப்பட்டதா?

20th August 1960]

*(ஆ) அப்படியானால் அதன் விவரம் என்ன?*

THE HON. SRI P. KAKKAN :(அ) & (ஆ) As the matter is of confidential nature, the information cannot be furnished at this stage. In respect of Parambikulam Aliyar Project, the final agreement between Madras and Kerala States was reached in Delhi on 4th July 1960.

**SRI S. M. ANNAMALAI :** *ஸார், இந்த பரம்பிக்குளம், ஆளியாறு பற்றி செய்யப்பட்ட ஒப்பந்தத்தின் நகல் ஒன்று சட்டமன்றத்தின் மேஜை மீது வைக்கப்படுமா?*

**THE HON. SRI P. KAKKAN :** *ஏற்கனவே சட்டமன்றத்தில் வைக்கப்பட்டிருக்கிறது.*

SRI K. VINAYAKAM : Are the matters discussed in the Southern Zonal Council such that they should be kept secret especially when the interests of the people of this State are concerned? When such matters are discussed, should not Members of the Legislature, if not the people at large, be made aware of what discussion took place at the Zonal Council meeting especially when it concerns our State?

THE HON. SRI C. SUBRAMANIAM : These are inter-State matters and unless negotiations are concluded and decisions finally taken, premature publication may lead to difficulties. Whenever decisions are taken ultimately, the matter is placed on the table of Parliament first and then automatically placed on the table of the State Legislature also.

*Survey on employment opportunities in Coimbatore district*

*** 351 Q.—SRI P. G. MANICKAM :** *கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—*

*(அ) கோயம்புத்தூர் ஜில்லாவிலே சர்க்கார் துறையிலும், தனியார் துறையிலும் வேலை வாய்ப்பு நிலவரம் பற்றி சர்க்காரால் சர்வே எடுக்கப்பட்டாகி விட்டதா?*

*(ஆ) அப்படியானால், அதன் நகல் ஒன்று அசெம்பிளி நூல் நிலையத்தில் வைக்கப்படுமா?*

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) Yes, Sir.

(ஆ) Copies of the Coimbatore Employment Market Report for the quarters ended 30th June and 30th September 1959 have been placed in the Legislature Library.

*Pay scales by the Secretariat typists and steno-typists*

* 352 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have received any petition from the typists and steno-typists working in the Secretariat about their grievances regarding their scale of pay as recommended by the Pay Commission; and

(*b*) if so, the action taken thereon?

[20th August 1960

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Yes, Sir.

(b) The petition has been examined carefully by the Government and the petitioners have been informed that their request cannot be complied with.

*Mukkuvar community*

* 353 Q.—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) whether full fee concession is given to the Mukkuvar community in the Government Polytechnic, Nagercoil; and

(b) if not, why?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) & (b) The matter is under consideration.

SRI T. S. RAMASWAMI : Is this the only institution where full fee concession is not given to the Mukkuvar community? I think other institutions give full fee concession.

THE HON. SRI C. SUBRAMANIAM : I am not quite sure. This community was included in the list of backward classes in the old Travancore-Cochin State. We are now considering whether this community should be included in our Madras backward class list also?

SRI T. S. RAMASWAMI : May I know whether the Government are aware of the fact that the Government have themselves included all backward communities in the old Travancore-Cochin State to enjoy the concession when some parts of old Travancore-Cochin State were transferred to Madras? When the Mukkuvar community has been declared as backward and are getting all concessions in other institutions in the Travancore-Cochin State, whether the Government will take steps to allow these Mukkuvar community boys in this Polytechnic also to get full fee concession?

THE HON. SRI C. SUBRAMANIAM : As I said the matter is under consideration.

*Fishing harbour for Rayapuram*

* 354 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Local Administration be pleased to state the present stage of construction of a fishing harbour at Rayapuram?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : The final report from the Ad hoc Committee constituted to go into the question of integration of the construction of fishing harbour at Royapuram with the construction of a sea face-wall there is awaited.

SRI A. A. RASHEED : May I know what is the Central Government aid expected for the construction of this harbour? Do the Government expect any foreign aid also?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : There is the Ad hoc Committee which is going into the question of integration of the construction of fishing harbour at Royapuram with the

construction of a sea-face wall there. At present I am not in a position to tell the hon. Member the aid we are expecting from Central Government.

SRIMATHI HEMALATHA DEVI : May I know who are the members of the Ad hoc Committee and what are their functions?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON :

The Director of Fisheries, Madras—*Chairman.*

*Members*

Chief Engineer, Port Trust.

State Port Officer, Madras.

Chief Engineer, Public Works Department.

Principal Officer, Mercantile Marine Department.

Corporation Engineer, Madras.

Assistant Engineer, Harbour, Office of the Director of Fisheries.

The Ad hoc Committee will—

(1) go into the question of establishing a fishing harbour in the city and the suitability of the site.

(2) examine the adequacy and suitability of the structure suggested for the harbour by the Harbour Expert and recommend improvements, if any.

(3) examine the possibility of combining the sea-face wall scheme so that both aims are achieved at the minimum cost.

(4) suggest phasing of the scheme consistent with the needs of fishing trade, and

(5) suggest an agency for executing the work.

SRI A. A. RASHEED : May I know, Sir, what is the estimated cost of this fishing harbour? 9-30 a.m.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : In the Second Five-year Plan the Fisheries Department has been provided with Rs. 7 to 8 lakhs for this purpose.

SRI K. VINAYAKAM : May I know, Sir, what is the glamour and sanctity attached in locating the fishing harbour at Royapuram instead of at Triplicane side? May I also know whether the quantity of fish available in that area is large and are they not available at Triplicane? Will the Government think of the possibility of constructing a shipyard at Triplicane side also?

[20th August 1960

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : The Rayapuram side harbour is better suited than Triplicane for this purpose and already there is large fishing and it is better than Triplicane.

### *Industrial Training Institutes*

* 335 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) சென்னை மாகாணத்திலே எத்தனை தொழில் நுட்ப ஊழியர்கள் சம்பந்தமான பயிற்சி நிலையங்கள் இருக்கின்றன ?

(ஆ) எத்தனை தொழில் நுட்ப ஊழியர்களுக்கு 1960-ம் வருடத்தில் பயிற்சி கொடுக்கப்பட்டு வருகின்றன ?

(இ) மூன்றுவது ஐந்து ஆண்டுத் திட்ட காலத்துக்குள் எத்தனை தொழில் நுட்ப ஊழியர்களுக்குப் பயிற்சி அளிக்கத் திட்டமிடப்பட்டிருக்கின்றது ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) 13 (thirteen) Government Industrial Training Institutes and 61 (sixty-one) aided industrial schools.

(ஆ) 19,768 (nineteen thousand seven hundred and sixty-eight) skilled workers.

(இ) 28,188 (twenty-eight thousand one hundred and eighty-eight) skilled workers.

MR. SPEAKER : Questions are over.

9-30 a.m. [*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

## II. CATCHING THE EYE OF THE SPEAKER.

MR. SPEAKER : I have to make a request to the hon. Members. I find there is an increasing tendency among hon. Members that whenever they want to speak, they draw the attention of the Speaker by shouting " Sir, Sir." This is quite unparliamentary. If I do not see them, that means I do not want to look at them. Instead of shouting " Sir, Sir," hon. Members may raise their hands. Hon. Members Sri N. K. Palanisami and Sri T. T. Daniel raised their hands, but they did not catch my eye. Therefore, I suggest to them that they should raise their hands sufficiently high as to catch the eye of the Speaker.

THE HON. SRI R. VENKATARAMAN : The hon. Members must catch the eye of the Speaker and not his ears.

MR. SPEAKER : The Hon. Minister is right.

SRI K. VINAYAKAM : The hands do not catch the eye of the Speaker.

MR. SPEAKER : There is no remedy for that.

20th August 1960]

## III.—ANNOUNCEMENT.

### (1) ELECTION TO THE COMMITTEE ON PUBLIC ACCOUNTS.

MR. SPEAKER : I have to announce to the House that the following fourteen Members were duly nominated for the election of fourteen members of the Madras Legislative Assembly to the Committee on Public Accounts :—

1 Srimathi T. N. Anandanayaki.
2 Sri M. Kandaswamy Padayachi.
3 Sri M. Kalyanasundaram.
4 Sri V. K. Krishnamurthi.
5 Sri R. Krishnaswamy Reddy.
6 Sri S. Pakkiriswami Pillai.
7 Srimathi A. S. Ponnammal.
8 Sri V. K. Ramaswamy Mudaliyar.
9 Sri S. Ranganatha Mudaliar.
10 Sri T. S. Ramaswami.
11 Sri K. Sattanatha Karayalar.
12 Sri T. L. Sasivarna Thevar.
13 Sri A. V. Thomas.
14 Sri A. Vedarathnam.

As the number of candidates validly nominated is equal to the number of vacancies to be filled, namely, fourteen, I hereby declare them to have been duly elected to the Committee on Public Accounts for the year 1960–61.

Under rule 173 (2) of the Madras Legislative Assembly Rules, the Hon. the Minister for Finance and the Chairman of the Committee on Estimates are members of the Committee, ex-officio.

Under rule 174 of the Madras Legislative Assembly Rules, I hereby nominate Sri V. K. Ramaswamy Mudaliyar as the Chairman of the Committee.

SRI K. VINAYAKAM : I do not find any member representing the D.M.K. party in the list announced by the Hon. Speaker just now. Is it that the party has decided not to participate in the deliberations of this Committee?

MR. SPEAKER : I have only to announce to the House that election will take place for such and such committee and announce the dates for the various stages. After the election is over, I have to announce the results. I have nothing to do with nomination, etc. I am afraid I cannot elucidate any more than this.

### (2) ELECTION TO THE COMMITTEE ON ESTIMATES.

MR. SPEAKER : Another thing that I am going to announce will be of some interest to the hon. Members.

[Mr. Speaker] [20th August 1960

In view of the representations made by some hon. Members, I extend the time and date for the withdrawal of candidature for the election to the Committee on Estimates to 1 p.m. on Monday, the 5th September 1960. A poll, if any, will be taken on Tuesday, the 6th September 1960, between the hours of 9 a.m. and 1 p.m.

## IV.—CALLING ATTENTION TO THE INJURIOUS EFFECT OF SMOKE AND SULLAGE WATER FROM THE CAUSTIC SODA PLANT IN DHRANGADARA CHEMICAL WORKS, LIMITED, SAHUPURAM.

MR. SPEAKER : I have received notice under rule 41 from Sri M. S. Selvarajan calling the attention of the Hon. Minister for Revenue to a matter of urgent public importance.

In this connection, I would like to call the attention of the hon. Members to rule 41, which says :

"41. (1) A member may, after questions, and with the previous permission of the Speaker, call the attention of a Minister to any matter of urgent public importance and the Minister may then make a brief statement on the matter or ask for time to make a statement later.

(2) There shall be no debate on such statement at the time it is made . . ."

In calling the attention of a Minister to some matter of urgent public importance, the hon. Member should make a brief speech. In the Lok Sabha no speech is allowed on such a notice. I find here that there is a tendency among the hon. Members to deliver long speeches. May I once again remind the hon. Members that whenever they call the attention of the Hon. the Minister under rule 41 their speech should be very, very brief?

* SRI M. S. SELVARAJAN : I beg to call the attention of the Hon. the Minister for Revenue to a matter of urgent public importance, viz., the injurious effect of smoke and sullage water from the caustic soda plant in Dhrangadara Chemical Works, Limited, Sahupuram, on the public and workers inside the factory.

**கனம்** சபாநாயகர் அவர்களே, தரங்கதரா ரசாயனத் தொழிற்சாலை, திருச்செந்தூர் தாலூக்காவில் ஆறுமுகநேரியை அடுத்து மூன்று ஆண்டுகளுக்கு முன்பு ஆரம்பித்து, சென்ற ஆண்டு காஸ்டிக் சோடா உற்பத்தி ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. அந்தத் தொழிற்சாலையை அடுத்தும் சுற்றிலும் பெரிய, சிறிய ஊர்கள் பல இருக்கின்றன. இந்தத் தொழிற்சாலை வருவது குறித்து அப்பகுதியினர் எல்லாவிதமான ஒத்துழைப்பும் கொடுத்துக்கொண்டு வந்தார்கள். ஆரம்பிக்கப்பட்ட பிறகு அமைந்திருக்கக் கூடிய யந்திரங்கள் காரணமாக—உற்பத்தி ஆரம்பிக்கப்பட்ட பின்னர்—வெளியாகக் கூடிய க்ளோரின் காஸினாலும், அங்கிருந்து வெளிவரக் கூடிய கழிவு நீரினாலும் பல்வேறு உபத்திரவங்கள் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. அங்கிருந்து வெளி வரக்கூடிய புகையானது ஏறத்தாழ 5, 6 மைல் அளவுக்குப் பரவி, அங்குள்ள மக்களுக்கு கண்ணெரிச்சல், மயக்கம் முதலிய இந்த மாதிரியான கஷ்டங்கள் ஏற்படுகின்றன. அதிலிருந்து வரக் கூடிய கழிவு நீர் கூட கடலில் செலுத்தப்படாத நிலையில் "ஓபன்"-ஆக விடப்பட்டிருப்பதன் காரணமாக, தொழிற்சாலைக்குச் செல்பவர்களுக்கும் அப்பகுதியி-

லுள்ள, விவசாயம் இதர வேலைகளுக்குச் செல்பவர்களுக்கும் மயக்கம் ஏற்பட்டு, ஏறத்தாழ 30, 40 பேர்கள் மயங்கி விழுந்திருக்கிறார்கள். கடலில் பாதுகாப்போடு சேர்க்கப்படாததன் காரணமாக, பேக்வாட்டரில் சேர்க்கப்பட்டதன் காரணமாக உப்பு உற்பத்தி செய்யக்கூடிய தொழிற்சாலைகளை சுற்றி இருப்பதன் காரணமாக அவைகளும் பாதிக்கப்படலாமோ என்ற பயம் ஏற்பட்டிருக்கிறது. இந்த புகை அல்லது கழிவு நீர் காரணமாக பல மாடுகள் இறந்திருக்கின்றன. பேக்வாட்டரில் சேர்ந்திருப்பதனால் மீன்களெல்லாம் இறந்திருக்கின்றன. தொழிற்சாலைக்குள்ளும் தக்க பாதுகாப்பு இல்லாததன் காரணமாக தொழிலாளர் சிலர் இறந்திருக்கிறார்கள். வேலை செய்பவர்களுக்கும் தகுந்த அளவுக்கு பாதுகாப்பு வசதிகள் இருப்பதாகத் தெரியவில்லை. இப்பேற்பட்ட நிலைமைக்குக் காரணம் எங்களுக்குத் தெரிந்திருப்பது தொழிற்சாலை அமைப்பிலே கூட தாழ்வாரம் தட்டடி முதலியவை எந்த அளவு "ப்ரிஸ்கிரைப்" செய்யப்பட்டிருக்கிறதோ அதுவேயில்லாமல் தாழ்வாகக் கட்டப்பட்டிருப்பதாகவும், இயந்த அமைப்புக்கள் "லூஸ்" ஆக இருப்பதாகவும் தெரிகிறது. இதைப்பற்றி சுகாதார அதிகாரிகளுக்குக்கூட அப்போதைக்கப்போது தகவல்கள் கொடுக்கப்பட்டு வந்திருக்கின்றன. இப்போது இந்தத் தொழிற்சாலையை விஸ்தரிக்க ஏற்பாடு செய்துகொண்டிருப்பதால் மேலும் பயம் ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் இந்தத் தொழிற்சாலை முறையாக அமைக்கப்பட்டிருக்கிறதா, என்னென்ன கோளாறுகள் இருக்கின்றன என்று பார்த்து, அவசியம் ஏற்பட்டால் தாற்காலிகமாவது நிறுத்தி வைத்து, வேண்டிய ரிப்பேர் முதலியவை செய்து, அங்குள்ள உயிர்களுக்குத் தகுந்த பந்தோபஸ்து செய்யவேண்டும். செய்வார்கள் என்று எதிர்பார்த்து, அந்தத் தொழிற்சாலைக்கு உள்ளும், வெளியும் இருக்கக்கூடிய தொழிலாளர்களுக்கும் பொது ஜனங்களுக்கும் இருக்கக்கூடிய பயத்தைப் போக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, அதற்காகத்தான் இந்த அவசரப் பிரேரணையைத் தகுந்த நேரத்தில், தகுந்த விதத்தில் கொண்டு வந்திருக்கிறேன் என்று கூறிக்கொள்கிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : The Dhrangadara Chemical Works at Sahupuram in the Tirunelveli district is engaged in the manufacture of Caustic Soda utilizing the raw materials available in the area and sea water. The effluents from this factory are chlorinated water and waste water containing hydro-chloric acid. These effluents are led through separate channels for about two miles and discharged into a creak which joins the sea. The main complaints against the factory are—

(i) that the smoke and sullage water from this factory are causing irritation in the eyes and fatigue to the public in the area and the workers inside; and

(ii) that the discharge of effluents from this factory containing chlorine and hydrochloric acid into the creak has led to the perishing of the fishes in it and in the nearby sea-shore.

The Director of Public Health has reported that an Assistant Director of Public Health has inspected the factory. The Director has suggested the following measures to abate the nuisance :—

(i) that the waste water from the factory should be allowed to pass through closed pipes direct into the sea running for some distance, say 50 feet, from the shore; and

(ii) that the factory management should take suitable steps to prevent the leakage of chlorine gas from the manufacturing plants by maintaining the plant efficient and air tight at all times and also to provide goggles and face masks for the workers.

Section 36 of the Madras Public Health Act prohibits the pollution of water-courses by industrial effiuents and sewages. Section 44 of the Act empowers the Health Officers to take necessary measures to abate any such nuisance. The Government have recently issued instructions to the Director of Public Health and the Collectors emphasising the necessity for enforcing the provisions of the Madras Public Health Act strictly to abate the nuisance caused by industrial effluents. The Director of Public Health has also been specifically asked to instruct the District Health Officer, Tirunelveli, to take suitable action under the provisions of the Madras Public Health Act to abate the nuisance caused by effluents let out by Dhrangadara Chemical Works, to ask the factory management to take the preventive measures suggested by the Director of Public Health and to submit a report to Government.

## V. GOVERNMENT BILLS.

### (1) THE MADRAS PANCHAYAT UNION COUNCILS (SPECIAL PROVISIONS FOR FIRST CONSTITUTION) BILL, 1960 (L.A. BILL NO. 19 OF 1960).

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move :

" That the Madras Panchayat Union Councils (Special Provisions for First Constitution) Bill, 1960 (L.A. Bill No. 19 of 1960), be taken into consideration."

கனம் சபாநாயகர் அவர்களே, நாம் புதிதாக ஏற்படுத்தியிருக்கும் பஞ்சாயத்துச் சட்டத்தின் பிரகாரம் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலகள் ஏற்படுத்த வேண்டியிருக்கிறது. அதிலே முதல் கட்டமாக 75 பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்கள் இந்த அக்டோபர் 2-ம் தேதியில் இருந்து ஆரம்பிக்கப்பட இருக்கின்றன. அடுத்த ஆண்டு அக்டோபர் 2-ம் தேதிக்குள்ளாக எல்லாப் பகுதிகளிலும் இந்தப் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்கள் அமைக்கப்படவேண்டும். முன்பு ஏற்படுத்திய சட்டப் பிரகாரம் ஒவ்வொரு பஞ்சாயத்தும் ஒவ்வொரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுத்து அனுப்ப வேண்டுமென்று சட்டம் செய்திருக்கிறோம். பத்தாயிரத்துக்கு மேற்பட்ட பஞ்சாயத்துக்களில் தேர்தல்கள் நடந்து பிரசிடெண்டுகள், வைஸ் பிரசிடெண்டுகள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள். பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்கள் என்று வைப்பதினால் மறுபடியும் இன்னொரு எலக்ஷன் ஏற்படலாம் என்ற அபிப்பிராயம்

இருந்து வருகிறது. மறுபடியும் உடனடியாக ஒரு தேர்தலை நடத்துவதைத் தவிர்ப்பதற்காகவே இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. இதற்குப் பின்னால் வரக்கூடிய பஞ்சாயத்து பிரசிடெண்டுகளே பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களின் பிரதி நிதிகளாக இருக்கலாம் என்ற கருத்து இருக்கிறது. அதைப் பொறுத்து உடனடியாகப் பரிசீலனை செய்ய வேண்டிய அவசிய மில்லை. அதற்குக் காலம் இருக்கிறது. நடைமுறையில் எப்படி நடந்து வருகிறது என்பதைப் பொறுத்து, ஒரு வருஷம், இரண்டு வருஷம் கழித்து முடிவு எடுக்கக் காலம் இருப்பதால் இப்போது அது பற்றி முடிவு ஒன்றும் செய்ய வேண்டிய அவசியம் இல்லை. தற்போது, இப்போது ஏற்படுத்தப்படும் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களில் பஞ்சாயத்து போர்டு பிரசிடெண்டையே பஞ்சாயத்து யூனியன் மெம்பராக வைத்துக் கொண்டு ஆரம்பிக்க வேண்டுமென்று முடிவு செய்து இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. இதிலே எந்த விதமான சிக்கல்களும் இல்லை. இதை ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER: Motion moved:

"That the Madras Panchayat Union Councils (Special Provisions for First Constitution) Bill, 1960 (L.A. Bill No. 19 of 1960) be taken into consideration."

MR. SPEAKER: The hon. Member Sri M. Kalyanasundaram has given notice of an amendment that the Bill be taken into consideration after 2nd October 1961. Since the hon. Member is not in his seat, the amendment is not moved. Those hon. Members who want to take part in the general discussion may please give their names to me.

SRI T. SAMPATH: While supporting this Bill I wish to point out certain difficulties which would arise in the working, if this Bill becomes an Act as it is. Sir, this new Panchayats Act was enacted in 1958 and it has come into force on 1st January 1960. As per Section 11 of the Panchayats Act, Panchayat Union Councils have to be constituted. Just now the hon. Minister has stated that 72 Panchayat Union Councils have to be constituted on October 1st. Section 12 of the Panchayats Act deals with the strength of the Council, the manner of election and also the members to be elected to the Council. As per Section 12, each Panchayat will have to elect one member from the Panchayat to the Union Council. Thereafter, Sir, the Union Council will have to elect one Chairman and Vice-Chairman also for the Council. Now a difficulty would arise. The Hon. Minister has stated that Government by means of this Bill seek to make the Presidents of the panchayats as ex-officio members of the Panchayat Union Councils for the first constitution, in order to obviate the difficulty of holding elections for over 10,000 panchayats. That is quite all right. Indirectly the Government want to suspend the provisions of the Panchayats Act temporarily by means of this Bill.

Sir, if a President of a Panchayat is elected as Chairman or vice-Chairman of the Panchayat Union Council, then he will cease to hold office as President of the Panchayat as per the provisions of sub-section (3) of Section 32 of the Panchayats Act.

(Sri P. G. Manickam in the Chair)

In that case election will have to be held again for electing the President of the Panchayat. There is one other difficulty also. According to Clause 2(a) of this Bill it is obligatory that the President of the Panchayat should hold office as President to become an ex-officio member of the Panchayat Union Council. On the other hand, Section 32 (3) of the Panchayats Act, as I pointed out just now, says that the President or Vice-President shall cease to hold office as such on his election as Chairman or Vice-Chairman of the Union Council. Both are inconsistent and contradictory in nature. It looks an anomaly also. I wish to point out that unless a person is the President of a Panchayat he cannot become a member of the Union Council. It is a *sine qua non*. That is the difficulty. So, if we are to solve the difficulty, I think a person should be allowed to hold both offices, viz., the Chairman of the Panchayat Union Council as well as the President of the Panchayat. If that is done, I think the problem will be solved. I have given an amendment to that effect so that the necessary provision may be made in the present Bill. Hence, I request the Hon. Minister to examine my amendment.

**SRI N. MARUDHACHALAM:** தலைவர் அவர்களே, பஞ்சாயத்துச் சட்டம் கொண்டு வருவதைப் பற்றி ஆட்சேபிக்கவில்லை. "பஞ்சாயத்துத் தேர்தல் சமீபத்தில் நடந்தது. மறுபடியும் தேர்தல் நடத்த வேண்டியதில்லை என்பதற்காகத்தான் இந்த மசோதா" என்று கனம் மந்திரி அவர்கள் கூறினார்கள். பஞ்சாயத்தே இல்லாமல் சில இடங்கள் இருக்கின்றன. அங்கு பஞ்சாயத்து ஏற்படுத்த வேண்டுமென்று விண்ணப்பங்கள் கொடுத்தும் இன்னும் அங்கு ஏற்படுத்தப்படவில்லை. மதுக்கரையில் பஞ்சாயத்து ஆரம்பிக்க ஏற்பாடாகியிருந்தது, சிமெண்ட் கம்பெனி முதலாளியின் நிர்ப்பந்தத்தினால் ஆரம்பிக்கப்படாமல் நிறுத்தப்பட்டது. இப்போது இருக்கக் கூடிய பஞ்சாயத்துக்களில் எல்லாம் தேர்தல் நடத்தி அந்தப் பஞ்சாயத்துத் தலைவர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்புவதுதான் உசிதமாக இருக்கும் என்று நம்புகிறேன். இப்போது இருக்கக் கூடிய பஞ்சாயத்துக்களுக்கு அதிக அதிகாரம் கொடுக்கவேண்டும். அப்போதுதான் கிராமங்களையெல்லாம் நல்ல முறையில் சீர்திருத்த வசதியாக இருக்கும். இப்போது கோவையில் உள்ள மதுக்கரை பஞ்சாயத்துக்கும், தெலுங்கன்பாளையம் பஞ்சாயத்துக்கும் தேர்தல் நடைபெற இருக்கிறது. அந்த இரண்டு பஞ்சாயத்துக்களுக்கும் தேர்தல் நடத்த சர்க்கார் உடனடியாக நடவடிக்கை எடுத்து பஞ்சாயத்து யூனியனோடு சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

20th August 1960]

**SRI S. M. ANNAMALAI :** சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இந்த மசோதாவை உண்மையிலே நான் வரவேற்கிறேன். அதற்கு முக்கியமான காரணம்—1958-ம் ஆண்டு, சட்ட மன்றத்தின் முன்னால் நிறைவேற்றப்பட்ட சட்டத்தின்படி, ஒவ்வொரு பஞ்சாயத்து போர்டின் மூலமாகவும் ஒவ்வொரு ரெப்ரஸெண்டேடிவ்வை மறுபடியும் தேர்ந்தெடுத்து அனுப்பவேண்டுமென்றால், கிராமங்களில் இரண்டு கட்சிகள் ஏற்பட்டு, மேலும் மேலும் குழப்பம் உண்டாகும். அந்தக் காரணத்தையொட்டித்தான், எல்லா ஊராட்சி மன்றத் தலைவர்களும் எப்பொழுது வேண்டுமானாலும் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் மெம்பராக இருக்கலாம் என்ற நல்ல திருத்தத்தைக் கொண்டுவந்திருக்கிறார்கள்.

இந்தப் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் சட்டம் 1958-ம் ஆண்டில் சட்டமாகி, 1960-ம் ஆண்டு, ஜனவரி மாதம் 1-ந் தேதியிலிருந்து அமுலுக்கு வந்துவிட்டது. ஒரு சட்டம் அமுலுக்கு வரும்போது அதற்கு உண்டான விதிகளையும் பிறப்பித்தால்தான் அந்தச் சட்டம் எப்படி எப்படி இந்த மாநிலத்தில் அமுல் நடத்தப்படமுடியும் என்று தெளிவாகத் தெரியும். 1960-ம் ஆண்டு ஜனவரி 1-ந் தேதியிலிருந்து அமுலுக்கு வரும் என்று சொல்லிவிட்டு, ஜனவரி 13-ந் தேதி கெஜட் நோடிபிகேஷன் கொடுத்து, இந்தச் சட்டம் அமுலுக்கு வந்துவிட்டது. இதன் காரணமாக, நேற்றையதினம் ஒரு கேள்விக்கு சட்ட மன்றத்தின் முன்னால் அமைச்சர் அவர்கள் பதில் சொல்லும்போது, 'சட்டப் பிரச்சினை இருக்கிறது' என்றார். 1958-ம் ஆண்டு பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் சட்டத்தின்படி ஒரு பஞ்சாயத்துத் தலைவர் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவரலாம். ஆனால், 1950-ம் ஆண்டு சட்டத்தின்படி அவர்கள் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவரக்கூடாது என்று குறிப்பிட்டிருக்கும் காரணத்தால், 1950-ம் ஆண்டு சட்டப்படி ஒரு பஞ்சாயத்துத் தலைவரைத் தேர்ந்தெடுத்தபின், 1958-ம் ஆண்டு சட்டத்தின்படி நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவரலாமா என்று சட்டப் பிரச்சினை இருக்கிறது. ஆகையால்தான், சில ஊராட்சி மன்றங்கள், ஊராட்சி மன்றத் தலைவர்கள் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவந்திருந்தபோதிலுங்கூட, அதை அங்கீகரிப்பதா, அப்படியே விட்டுவிடுவதா என்ற ஐயம் இருக்கிறது, என்று சட்ட மன்றத்தின் முன்னால் நான் கேட்ட கேள்விக்கு அமைச்சர் பதில் சொன்னார்கள்.

சட்டப் பிரச்சினையைப் பார்க்கும்போது, 1958-ம் ஆண்டுச் சட்டமும், 1950-ம் ஆண்டுச் சட்டமும், இரண்டு சட்டங்களும் இந்த மாநிலத்தில் அமுல் நடத்தப்படுவதன் காரணமாகத்தான் இப்பொழுது சட்டப் பிரச்னைகள் எழுகின்றன. அதையொட்டிகூட, இந்தச் சட்ட மன்றத்தின் முன்னால் வைக்கப்பட்டிருக்கும் திருத்த மசோதாவைப் பார்க்கும்போது, பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் வந்த பிறகு சட்டப்படி செல்லுமா, செல்லாதா என்ற

அச்சம் இருந்து கொண்டிருக்கிறது. முன்னமேயே நான் சொன்னேன்—டிஸ்ட்ரிக்ட் டெவலப்மென்ட் கவுன்சிலுக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் சட்டப்படி தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள் அல்ல, அவர்களுக்குப் பத்து நாள் அவகாசம் தர வேண்டும். இப்படித் தராமல் ஏழு நாட்களுக்கு முன்னலேயே தேர்தலை நடத்திவிட்டார்கள். இப்படி அவசர அவசரமாக 1958-ம் ஆண்டு இந்தச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. என் இவ்வளவு காலதாமதமாக, 'பரிசீலனை செய்கிறோம், கஷ்ட நஷ்டங்களை இன்னும் யோசித்துக்கொண்டிருக்கிறோம்' என்று சட்ட மன்றத்தின் முன்னல் சொல்லப்படுகிறது என்று புரிய வில்லை. இந்த ஒரு திருத்தம் போதாது.

கருத்தரங்கில் கூட பல யோசனைகள் தெரிவிக்கப்பட்டிருக் கின்றன. அந்த யோசனைகள் என்ன ஆயிற்று? கருத்தரங்கு நடத்த பல ஆயிரம் ரூபாய் செலவாயிற்று. மாவட்டங்களிலும் நடத்தப்பட்டன. அதைப்போலவே, சமுதாய நலத் திட்டப் பகுதிகளிலும், எந்த எந்த சமுதாய நலத் திட்டப் பகுதிகள் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலின்கீழ் வரப்போகின்றனவோ அங்கு கருத்தரங்கு நடத்தி, ஊராட்சி மன்றத் தலைவர்களுக்கும் இந்தச் சட்டத்தைப்பற்றிய விளக்கங்களை நல்ல முறையிலே சொல்லி, அவர்களுடைய ஆலோசனையும் கேட்கப்பட்டது. அந்த ஊராட்சி மன்றத் தலைவர்களும் சிலபல நல்ல கருத்துக்களைச் சொல்லியிருக்கிறார்கள். 'ஒரு ஊராட்சி மன்றத்தின் பணத்தை எடுத்து மற்றொரு ஊராட்சி மன்றத்திற்குச் செலவிடுவது நியாய மல்ல; வேண்டுமானல், ரேஷியோ விகிதத்திலே செலவிடலாமே தவிர, ஒரு ஊராட்சி மன்றத்தில் செலவழிக்காமல் மிச்சம் இருக்கிற பணத்தை எடுத்து, வேறொரு ஊராட்சி மன்றத்திற்குச் செலவிடுவது நியாயமல்ல; இதைப் பரிசீலிக்கவேண்டும்' என்பது போன்ற நல்ல கருத்துக்களை அந்த கருத்தரங்குகளில் சொல்லி யிருக்கிறார்கள். அப்படிப்பட்ட நல்ல கருத்துக்களை இந்தச் சர்க்கார் பரிசீலனை செய்து, திருத்தம் கொண்டுவரவேண்டும். எல்லாத் திருத்தங்களையும் ஒரே மசோதாவில் சேர்த்துக் கொண்டு வந்தால் நலமாக இருக்கும்.

அக்டோபர் 2-ந் தேதி பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் சில இடங்களில் ஏற்படப்போகிறது. அக்டோபர் 2-ந் தேதி என்றால், அதற்கு ஒன்றரை மாதங்கள்கூட இல்லை. இந்த ஒன்றரை மாதங்களுக்குள் இந்த மசோதா சட்டமாகி, சட்டமாகிய பிறகு, அதற்குரிய விதிகளைப் பிறப்பித்து, அதற்குப் பிறகு ஆங்காங்கு உள்ள சமுதாய நலத்திட்டப் பகுதிகளில் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்கள் அமைக்கவேண்டுமென்றால் இது மிக மிக அவசர மாகத்தான் இருக்கும். உண்மையிலேயே இந்தச் சட்டம் நல்ல முறையில் பயன்படுமா என்று அச்சமாக இருக்கிறது.

1958-ம் ஆண்டு பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் சட்டப்படி, பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலில் பெண் உறுப்பினர் இல்லை யென்றால், அல்லது தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்த உறுப்பினர்

இல்லையென்றால், அவர்களில் மூன்று மூன்று உறுப்பினர்களை நியமிக்கவேண்டுமென்று சட்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கு இந்த நாள் வரையில் இந்தச் சர்க்கார் என்ன செய்தார்கள்? அதற்கு உண்டான விதிகள் பிறப்பிக்கப் பட்டனவா? இப்படி இப்படித் தேர்ந்தெடுக்கவேண்டும், இன்ன ஆட்களைச் சிபார்சு செய்து அனுப்புங்கள் என்று சமுதாய நலத் திட்டப் பகுதிக்குத் தகவல் அனுப்பியிருக்கிறார்களா இல்லையா என்றுகூட சந்தேகிக்க வேண்டியிருக்கிறது. இப்படி இந்தச் சட்டம் இன்னும் பல திருத்தங்களோடு வரவேண்டியிருக்கிறது. சட்டப் பிரச்னையைப் பார்த்தால், 1950-வது ஆண்டு சட்டப்படி நடப்பதா, 1958-வது சட்டப்படி நடப்பதா என்ற அந்த அச்சம் இருக்கிறது.

1958-ஆம் ஆண்டு சட்டப்படி, ரீஜினல் இன்ஸ்பெக்டர் என்ற பதவியே கிடையாது. ரீஜினல் இன்ஸ்பெக்டர் பதவிக்குப் பதிலாக ரெவினியூ டிவிஷனல் ஆபிசர்தான் நியமிக்கப்படுவார்கள். ஆனால், 1950-வது ஆண்டு சட்டப்படி, ரீஜினல் இன்ஸ்பெக்டர் இருந்திருக்கிறார். இப்படியாக இரட்டை ஆட்சி நடைபெறுகிற படியால், நல்ல ஆட்சி கிராமங்களில் ஏற்படும் என்ற நிச்சயம் இல்லாமல் இருப்பதைக் குறித்து வருந்துகிறேன். இதையெல்லாம் நல்ல முறையில் ஆலோசனை செய்து, 1958-ம் ஆண்டுச் சட்டத்தையும் ஒவ்வொரு செக்ஷனை எடுத்துப் பார்த்து, அதற்கு வேண்டிய விதிகளைப் பிறப்பித்து ஒரு சட்டத்தை அமுல் நடத்த வேண்டுமே தவிர, இம்மாதிரி இரண்டு சட்டங்களை வைத்துக் கொண்டு, இரட்டை ஆட்சியாக, எனக்கும் அதிகாரம் இருக்கிறது என்று ஒருவர் சொல்ல, எனக்கும் அதிகாரம் இருக்கிறது என்று இன்னொருவர் சொல்லக் கூடிய நிலைமையில் கிராமப் புறத்தில் ஊராட்சி மன்றத் தலைவராக வருபவருக்கு அது மிகவும் அச்சமாக இருக்கிறது.

வரவு செலவுத் திட்ட விவாதத்தின்போதும் நான் சொன்னேன், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் சட்டமும், டிஸ்ட்ரிக்ட் டெவலப்மென்ட் கவுன்சில் சட்டமும் நல்ல முறையில் பயன்பட வில்லை, அதற்கு உண்டான விதிகளைப் பிறப்பிக்கவில்லை என்று அந்தச் சட்டம் மாநிலத்தில் எப்படி எப்படி அமுல் நடத்தப்பட வேண்டும் என்று விதிகளைச் செய்யாமல் இருப்பதன் காரணமாக பல குழப்பங்கள் ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன. ஆகையால் அவசர அவசரமாகப் பரிசீலனை செய்து, அதற்கு உண்டான விதிகளை இந்த மாநிலத்தில் பிறப்பிக்கவேண்டும் என்று சொன்னேன். ஆகவே, இப்பொழுது திருத்த மசோதா கொண்டு வருவதைவிட இன்னும் எந்த எந்த செக்ஷனுக்கு என்னென்ன திருத்தங்களைச் செய்யவேண்டுமோ அதையெல்லாம் செய்யும் வகையில் எல்லாத் திருத்தங்களையும், உள்ளடக்கிய ஒரு மசோதாவைக் கொண்டு வந்து நிறைவேற்றினால் நல்ல முறையாக இருக்கும். அதைவிட்டுவிட்டு, ஊராட்சி மன்றத் தலைவர் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலில் இருக்கலாம் என்று

சொல்கிறார்கள். அடுத்தபடியாக, பெண் உறுப்பினர்கள் இருக்க வேண்டும், தாழ்த்தப்பட்ட வகுப்பிலிருந்து உறுப்பினர்கள் இருக்கவேண்டும் என்பதுபற்றிய திருத்தங்கள் கொண்டுவர வேண்டுமென்ற பிரச்சினையும் ஆலோசனையும் எழுகின்றன. இதையும் உண்மையிலேயே பரிசீலனை செய்திருக்கவேண்டும். இன்னும் சில ஊராட்சி மன்றங்களுக்குத் தேர்தல் நடைபெறாமல் இருக்கிறது. போளூர் சமுதாய நலத் திட்டப் பகுதி அண்மையில் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலில் சேர்க்கப்பட இருக்கிறது. போளூர் தாலூகாவில் கலசபாக்கம் என்னும் ஊர் இருக்கிறது. அதை அடுத்தாற்போல் தென்பள்ளிப்பட்டு பஞ்சாயத்து போர்டு இருக்கிறது. அந்தப் பஞ்சாயத்து போர்டுக்குத் தேர்தல் நல்ல முறையில் நடைபெறாததன் காரணமாக, அப்படியே நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது. இன்றுவரை அந்த ஊராட்சி மன்றத்திற்குத் தேர்தல் நடைபெறவில்லை. அப்படி நடைபெறாமல் இருக்கும்போது, பழைய ஊராட்சி மன்றத் தலைவரே பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு மெம்பராக வரலாம் என்றால் அது பொருத்தமாக இல்லை. ஆகையால், அந்த இடத்தில் உடனடியாக ஊராட்சி மன்றத் தேர்தல் நடைபெறவேண்டும். அந்தத் தேர்தலை நடத்திய பிறகு யார் ஊராட்சி மன்றத் தலைவராக வருகிறாரோ, அப்படிப்பட்டவரை பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் மெம்பராக எடுத்துக்கொள்ளலாமே தவிர, தேர்தல் நடக்காமலிருக்கும் இடத்தில் பழைய தலைவராக இருக்கிறவர் வரலாம் என்று இருப்பது அவ்வளவு பொருத்தம் அல்ல. இதையெல்லாம் பரிசீலனை செய்து, பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு உண்டான விதிகளை உடனடியாகப் பிறப்பிக்கவேண்டுமென்று சொல்லிக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகின்றேன்.

10-00 a.m. * SRI P. ARASAN: கனம் சபைத் தலைவர் அவர்களே, நிதியமைச்சர் அவர்கள் 1960-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 1-ம் தேதியிலிருந்து 1961-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 1-ம் தேதிக்குள் எல்லாப் பகுதிகளிலும் பஞ்சாயத்து கவுன்சில் தேர்தல் நடத்தி விட வேண்டுமென்று குறிப்பிட்டார். நான் அதை ஆதரித்து சில வார்த்தை பேச ஆசைப்படுகிறேன். அமைச்சர் அவர்கள் கிராமந்தோறும் இருக்கும் பஞ்சாயத்து கவுன்சில் தலைவர்களே மெம்பர்களாக வந்தால் மிகவும் நல்லதாக இருக்கும், கூடிய சீக்கிரம் கவுன்சில் தேர்தலும் நடந்துவிடும் என்று குறிப்பிட்டார். ஒவ்வொரு பஞ்சாயத்தில் வந்திருக்கும் தலைவர்கள் நியாயமான முறையில் வரவில்லை. பணத்தைக் கொண்டும், பல சாய்காலைக்கொண்டும் தலைவராக வந்திருக்கிறார்கள். அப்படியிருக்கும் தலைவர்கள் பஞ்சாயத்தை நடத்த முடியாமலும், வரி வசூல் செய்யப்படாமலும், சில பஞ்சாயத்துக்களில் ஒன்றுமே நடக்காமல் பாழ்பட்டுக் கிடக்கிறது; சில பஞ்சாயத்துக்கள் நல்ல முறையில் நடைபெறாமல் பல குறைகள் இருந்துகொண்டே இருக்கின்றன. சில பஞ்சாயத்துக்களில் நல்ல மாதிரியாக படித்த மெம்பர்கள் வந்திருக்கிறார்கள். அவர்களுக்கு

20th August 1960] [Sri P. Arasan]

எந்தத் திறமையிருந்தும் அவர்கள் தலைவர்களாக வரமுடியவில்லை. அப்படியிருக்கக்கூடிய பஞ்சாயத்துப் பகுதியில் தலைவர்களே கவுன்சில் மெம்பர்களாக இருக்கலாமென்று அரசாங்கம் சொல்கிறார்கள். அந்தந்த பஞ்சாயத்திலுள்ள மெம்பர்களைக் கொண்டு ஏகமனதாக ஒரு கவுன்சில் மெம்பர் தேர்ந்தெடுத்து அனுப்பவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இன்னும் சில சிறு சிறு கிராமங்களில் பஞ்சாயத்துத் தேர்தல் நடத்தப்படவில்லை. அந்தக் கிராமங்களைச் சேர்த்து கூட்டுப் பஞ்சாயத்துக்களாக அமைத்து தேர்தல் நடத்தப்பட வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டு, இத்துடன் என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

SRI P. S. CHINNADURAI : மதிப்பிற்குரிய சபைத் தலைவர் அவர்களே, இந்த மசோதா திருத்தமாகக் கொண்டு வரப்பட்டிருக்கிறது. ப்ரஜா சோஷலிஸ்ட் கட்சியின் ஆதரவு இந்த மசோதாவுக்கு ஏற்கெனவே அளித்திருக்கிறோம். அந்த ஆதரவு இப்பொழுதும் ஊர்ஜிதப்படுத்தப்படுகிறது. அப்படி ஆதரவை ஊர்ஜிதம் செய்து மேற்கொண்டு சில கருத்துக்களை இந்த நேரத்தில் அவசியம் தெரிவிக்க வேண்டியதாக இருக்கிறது. இந்த மசோதாவுக்கு எங்கள் கட்சி ஆதரவு அளித்ததற்குக் காரணம் பஞ்சாயத்துக்களைக் கட்சிப் பாகுபாடின்றி நடத்துவதில் பரிபூர்ண ஒத்துழைப்பு இருக்க வேண்டும் என்பதற்காகத்தான். இந்த ராஜ்ய சர்க்கார் புதியதாக பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களை அமைத்து கிராம ராஜ்யத்தை அமைத்து பொதுவாக மேலுள்ள அதிகாரத்தை பஞ்சாயத்துகளுக்குப் பகிர்ந்து அளிப்பதற்கு நடவடிக்கை எடுத்துக்கொண்டு அதை உருவாக்குவதில் எடுத்துக்கொள்ளப்படுகிற முயற்சிக்கு நாங்கள் உறுதுணையாக இருக்க வேண்டும் என்ற ஒரே காரணத்திற்காகத் தான் இத்தகைய திருத்த மசோதாவிற்கு கமிட்டியிலும் சரி ஆதரவு கொடுத்தேன் என்று நான் இங்கு சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆனால் இந்தத் திருத்தமானது ஏற்கெனவே பஞ்சாயத்துச் சட்டத்தில் கொடுக்கப்பட்டிருக்கிற சில சலுகைகளைக்கூட பறிப்பதாக அமைந்துவிட்டால் அது, இந்த பஞ்சாயத்து சட்டத்தை எந்த எண்ணத்தில் நிறைவேற்றினோமோ அந்த எண்ணம் நிறைவேறாமல் அதற்குப் புறம்பாகப் போய்விடக் கூடும். இந்தத் திருத்தத்தைப் பொறுத்த வரையில் இன்னும் சற்று ஆலோசனை செய்து அதைச் சரியாக அமைக்க வேண்டியது அவசியம் என்று நான் கருதுகிறேன். உதாரணமாக பஞ்சாயத்து சட்ட 12-வது ஷரத்து ஹரிஜனங்களோ அல்லது பெண்களோ தேர்ந்தெடுக்கப்படாவிட்டால், அவ்வாறு இருக்கக்கூடிய பஞ்சாயத்து கவுன்சிலில் அந்தப் பிரிவின்படி மூன்று பேர்களுக்குக் குறையாமல் பெண்களில் மூன்று பேர்களையும் ஹரிஜனங்களில் மூன்று பேர்களுக்குக் குறையாமலும் அங்கத்தினர்களாகச் சேர்த்துக்கொள்ளலாம் என்று கூறுகிறது. ஆனால் புதிய திருத்தத்தில் அதற்குரிய விதி சேர்க்கப்படவில்லை என்று நான் நினைக்கிறேன். இது இயல்பாக நடந்த தவறு என்று தான்

[Sri P. S. Chinnadurai] [20th August 1960

கருதுகிறேன். உரிமையைப் பறிக்க வேண்டும் என்ற கருத்தில் செய்யப்பட்ட தவறு என்று நான் நினைக்கவில்லை. தெரியாமல் செய்யப்பட்ட தவறுதலை இந்த சந்தர்ப்பத்தில் திருத்திக் கொள்ளலாம் என்று தோன்றுகிறது. அப்படி இந்தச் சந்தர்ப் பத்தில் திருத்திக்கொண்டால்தான் அது பொருத்தமாக இருக்கும் என்று நான் கருதுகிறேன். பஞ்சாயத்து கவுன்சிலுக்கு அங்கத் தினர்களைப் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்குப் பதில் பஞ்சா யத்து யூனியன் ப்ரெசிடெண்ட்கள் எல்லாம் பஞ்சாயத்து கவுன்சில் மெம்பர்களாக ஆகப்போகிறார்கள். அவ்வாறு அமைக்கப்போகிற பஞ்சாயத்து யூனியன் ப்ரெசிடெண்ட்கள் எல்லாம் சேர்ந்து இருக்கக்கூடியதில் ஹரிஜனங்களும் பெண்களும் வராமல் இருந்தால், அவர்கள் வருவதற்கு இடம் இருக்கக்கூடிய அளவில் திருத்தத்தை மாற்றி அமைக்க வேண்டும் என்று இந்த ராஜ்ய சர்க்காரை வேண்டிக்கொள்ளுகிறேன். வேண்டும் என்றே இதை விட்டிருக்க மாட்டார்கள் என்று நினைக்கிறேன். ஏதோ தவறு தலாக விடப்பட்டிருக்கிறது. அதைத் திருத்திக்கொள்வதற்கு இதுதான் சந்தர்ப்பம் என்பதை மீண்டும் தெரிவித்துக்கொள்ளு கிறேன். இதை யாவரும் ஒப்புக்கொள்ளுவார்கள் என்றே நினைக்கிறேன். பஞ்சாயத்து சட்டம் எந்த நோக்கத்துடன் நிறைவேற்றப்பட்டதோ அந்த நோக்கம் நிறைவேறாமல் போய் விடக்கூடாது. அதனால் இதை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். பெண்களுடைய உரிமைகளையும் ஹரி ஜனங்களுடைய உரிமைகளையும் கண்டிப்பாகப் பாதுகாக்க வேண்டும்.

இந்த ஒரு தடவை பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு அங்கத்தினர்களாக ப்ரெசிடெண்ட்கள் இருக்கலாம் என்று இந்த திருத்த மசோதாவில் கூறப்பட்டிருக்கிறது. இந்த ஒரு தடவைக்குப் பிறகு என்ன ஆகும், அதன் பிறகு முடிவு எப்படி யாகும் என்பது நிச்சயம் இல்லை. இப்பொழுது செய்யப்படுகிற மசோதா தற்காலிகமாக இருந்தாலும் சரி அல்லது குறைபாடுகள் இல்லாமல் இருந்தாலும் சரி என்னைப் பொறுத்த வரையில் ஒன்றை மட்டும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். புதியதாக யூனியன் கவுன்சில் அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்படுவதாக இருந்தாலும் சரி அல்லது பஞ்சாயத்து அங்கத்தினர்கள் ப்ரெசி டெண்டை தேர்ந்தெடுப்பதாக இருந்தாலும் சரி எந்த முறை நடை பெற்றாலும் சரி, ஜனநாயக அடிப்படையில், ஜனநாயகத்திற்கு விரோதமாக இல்லாமல் நடைபெற வேண்டியதுதான் நலம்; அது தான் பொருத்தமாக இருக்கும் என்பதை நான் இங்கே கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

பஞ்சாயத்து ப்ரெசிடெண்டுகள் தற்சமயம் பஞ்சாயத்து அங்கத்தினர்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். இந்தப் பஞ்சாயத்துச் சட்டம் சமீபத்தில்தான் நிறைவேற்றப்பட்ட சட்டம். அது அமுலுக்கு வருவதற்கு முன் பொது மக்களால்

20th August 1960] [Sri P. S. Chinnadurai]

பொது வாழ்க்கையில் வாக்காளர் பட்டியலில் உள்ள அனைவராலும் பெருவாரியான ஓட்டுகளால் தேர்ந்தெடுத்து வந்தார்கள். அந்த முறைதான் அப்பொழுது இருந்தது. பஞ்சாயத்துச் சட்டத்தில் அந்த முறையை மாற்றி அங்கத்தினர்களால் பிரசிடெண்டு தேர்ந்தெடுக்கப்படும் முறையை அமல்படுத்தினார்கள். அது சரியான ஜனநாயக முறையல்ல, வாக்காளர் அனைவரிலும் பெரும்பான்மையோரால் பஞ்சாயத்து பிரசிடெண்டு தேர்ந்தெடுக்கப்படுவாரானால், எப்பொழுதும் பிரசிடெண்டே பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் அங்கத்தினராக இருப்பதை நான் வரவேற்பேன். ராஜ்ய சர்க்கார் புது முறையை அமுலுக்குக் கொண்டு வருவதானது முற்றிலும் பொருத்தமானதாக இருக்கிறது. இந்த முறை நல்லது என்பதை ராஜ்ய சர்க்கார் நன்றாக உணர்ந்திருக்கிறார்கள். பஞ்சாயத்து பற்றிய தேர்தல்கள் நடக்கும்போது அங்கங்கே சிற்சில சச்சரவுகள் நடைபெறுகின்றன. இப்படிப்பட்ட சச்சரவுகள் எல்லாம் எதிர்பார்த்த சச்சரவுகள்தான். ஆனால் நாம் எந்த அளவு எதிர்பார்த்தோமோ அந்த அளவில் நடைபெறவில்லை என்பது தெரிய வருகிறது. எதிர்பார்த்த அளவு சச்சரவு இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். கட்சி அடிப்படையில் தேர்தல்கள் இப்பொழுது நடைபெறவில்லை. அதுதான் அதற்கு முக்கியமான காரணம் என்று சொல்லலாம். கட்சி ரீதியாக பஞ்சாயத்துக்களில் போட்டியிட்டால் சச்சரவுகள் ஏற்படும். ஆனால் இப்பொழுது யார் ஊரில் பொதுவாக ஏராளமான நன்மை செய்து வருகிறாரோ, யார் மீது பொது மக்களுக்கு நம்பிக்கை இருக்கிறதோ அவர்களைத்தான் பஞ்சாயத்து ப்ரெசிடெண்டாக நியமித்து தேர்ந்தெடுத்து வருகிறார்கள், அங்கத்தினர்களாகவும் தேர்ந்தெடுத்து வருகிறார்கள். இந்த நிலைமையில் எதிர்காலத்தில் கூட பஞ்சாயத்து போர்டுக்கான தேர்தல்கள் கட்சி ரீதியாக நடைபெறுமானால் உண்மையில் பஞ்சாயத்து ராஜ்யம் என்பது கனவாகத்தான் போய்விடும் என்று நம்புகிறேன். சமீபத்தில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ. சஞ்சீவி ரெட்டி அவர்கள் ஒரு அறிக்கை வெளியிட்டிருந்ததை நான் பத்திரிகையில் படித்தேன். அதன் மூலம் பஞ்சாயத்துக்கள் தான் எதிர்காலத்தில் மிகவும் வலிமை உள்ளதாக, அதிகாரத்தை வகிக்கின்ற பொறுப்புள்ளதாக ஆக்கப்படுகின்றன. ஆகையால் காங்கிரஸ் கமிட்டிகள் இனிமேல் பஞ்சாயத்து தேர்தல்களிலே, ஸ்தல ஸ்தாபனத் தேர்தல்களிலே அதிமுக்கியமான பங்கு எடுத்துக் கொள்ளவேண்டும், கட்சி ரீதியாகவோ போட்டியிடவேண்டுமென்ற கருத்தைத் தெரிவித்தார்கள். அவர்கள் தம்முடைய சொந்தக் கருத்தைத் தெரிவிப்பதற்கு சுதந்திரம் உண்டு. அவர்கள் போக்கில் பார்த்தால் அது சரியாக இருக்கக்கூடும். ஆனால் நான் அதை ஏற்றுக்கொள்வதற்கில்லை. அவ்வாறு கட்சி ரீதியாகத் தேர்தல் கிராமங்களில் நடைபெறவேண்டுமானால் இப்போதுள்ள சூழ்நிலையில் ஒவ்வொரு ஊரும் கட்சி கட்சியாக

[Sri P. S. Chinnadurai] [20th August 1960

பிரிந்துவிடும் என்று நான் சொல்ல விரும்புகிறேன். இப்போதும் கிராமங்களில் கட்சி ரீதியான கருத்துக்கள் இருந்தாலும் ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் அது வெளிப்படுகிறது. அதுவும் ஒன்றிரண்டு நாட்களில் மறைந்துவிடுகிறது. கட்சிகளை மறந்து எல்லோரும் கிராமத்தின் முன்னேற்றத்தில் ஒன்றுபட்டு பாடுபடுகிறார்கள். கட்சி ரீதியில் தேர்தலில் போட்டியிடுவது என்றால் இந்த நிலைமை அடியோடு மாறிப்போய்விடும் என்று தெரிவித்துக் கொள்கிறேன். ஏனென்றால் இந்த ராஜ்யத்தில் காங்கிரஸ் மிகப் பெரும்பான்மையான கட்சியாக இருந்து ஆட்சி புரிந்து வருகிறார்கள். கட்சி ரீதியாகப் பஞ்சாயத்து போர்டு தேர்தல்களிலும் ஈடுபடுவது என்று வந்தால் இப்போது ராஜ்ய சர்க்கார் எண்ணிக் கொண்டிருக்கிற பஞ்சாயத்து ராஜ்யம் உண்மையில் அமையாது தடைபட்டுவிடும் என்று எடுத்துக்காட்ட விரும்புகிறேன். ஆகவே அகில இந்திய காங்கிரஸ் கமிட்டித் தலைவர் வெளியிட்ட கருத்தை இந்த ராஜ்ய சர்க்காரும் சரி, முதல் அமைச்சர் அவர்களும் சரி ஏற்றுக்கொள்ளக்கூடாது என்று கேட்டுக்கொள்ளுகிறேன். கட்சி ரீதியாக அமையாமல் பொதுப்படையாக இப்போது இருப்பது தான் நல்லது. இந்தப் பிரச்னை சம்பந்தப்பட்ட வரையில்— என் கட்சி சம்பந்தப்பட்டவரையில் நான் சொல்வேன். என் கட்சி— போட்டியிட்டு எங்கள் கட்சியைச் சேர்ந்தவர்கள் தலைவராக இருக்க முடியும் என்கிற இடங்களில்கூட கட்சியை மறந்து இதர கட்சியைச் சேர்ந்தவர் வரக்கூடிய நிலைமையை உண்டு பண்ணியிருக்கிறோம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே. இன்றுள்ள நிலைமையில் கட்சி சார்பில் போட்டியிடுவது என்பது சரியல்ல. அப்படித்தான் இருக்கவேண்டும் என்றாலும் சில ஆண்டுகள் ஒரு 15, 20 ஆண்டுகள் பொறுத்திருக்க வேண்டும். மற்றபடி கனம் சம்பத் சொன்ன ஆலோசனைகளையும் மனதில்கொண்டு—இந்தத் திருத்தத்தைச் சற்று விரிவாக அமைக்கும்படியாக வேண்டிக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

* **SRI M. S. SELVARAJAN :** கனம் சார்மென் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கிற மசோதா தற்காலிகமான ஏற்பாடு. வருகிற அக்டோபர் மாதத்தில் இருந்து பஞ்சாயத்து யூனியன் அமைக்க இருக்கிறோம். ஆனால் அடுத்த வருஷத்தில் அக்டோபர் மாதத்தில் இருந்துதான் இந்த ராஜ்யம் பூராவும் பஞ்சாயத்து யூனியன் இயங்கவேண்டுமென்ற முறையில் சட்டம் இயற்றியிருக்கிறோம். அதற்கு மத்தியில்—இன்னும் எல்லா பஞ்சாயத்துக்களுக்கும் தேர்தல் நடைபெற்று முடியவில்லையாகையால்—பஞ்சாயத்துக்களோடு, பஞ்சாயத்து யூனியனும் இன்றியமையாது இருப்பதனால்—பஞ்சாயத்து போர்டு தலைவர்களாக இதுவரையில் தேர்ந்தெடுக்கப்பட்டு இருப்பவர்களையே பஞ்சாயத்து கவுன்சில் மெம்பர்களாக இத் திருத்தச் சட்டத்தின் மூலம் போட்டு தற்காலிகமாக பஞ்சாயத்து யூனியன்களையும் சர்க்கார் அமைக்க உத்தேசித்திருப்பது வர

20th August 1960] [Sri M. S. Selvarajan]

வேற்கத்தக்கதுதான். இதுபற்றி எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் சிலர் குறிப்பிட்டபோது—ஸ்ரீ சின்னதுரை அவர்கள்—பெண்கள் இடம் பெறுவதற்கு இடம் இல்லாமல் போகலாம், ஹரிஜனங்கள் இடம் பெறுவதற்கு சந்தர்ப்பம் இல்லாமல் போகலாம் என்ற கருத்தைத் தெரிவித்தார்கள். ஆனால் சட்டப்பிரகாரம் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் அமைத்த பிற்பாடு அவர்களைக்—'கோவாப்ட்'' செய்யவேண்டும்—சேர்த்துக் கொள்ளவேண்டும் என்பதுதான் சட்டம். இன்றைக்கு இயல்பாக ஹரிஜன சகோதர சகோதரிகள் பஞ்சாயத்து தலைவர், தலைவியாக வந்திருக்கக்கூடிய நிலைமை இருக்குமானால் அவர்களுக்கு இருக்கக்கூடிய வழி ஒன்றுமே அடைபடவில்லை. பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் அமைத்த பிற்பாடும் 'கோவாப்ட்' பண்ணிக்கொள்ள நிலைமை ஏற்படும்.

இன்னொன்று. இந்தத் திருத்தச்சட்டப் பிரகாரம்—கனம் சம்பத் அவர்கள் எடுத்துக் காட்டியது போல இரண்டு பொறுப்புள்ள ஸ்தானங்களை ஒருவர் வகிக்க முடியாது. பஞ்சாயத்து போர்டு தலைவராக இருக்கக்கூடியவர்கள் தற்காலிகமாக இந்தச் சட்டப்பிரகாரம் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் உறுப்பினராகி—பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் தலைவராகவோ, உபதலைவராகவோ வரும்பட்சத்தில் தம்முடைய சொந்த—பஞ்சாயத்து தலைவர் பதவியை விட்டுவிடும்படி இருக்கிறது. அதாவது இந்தப் பதவி போய்விடுகிறது. இரண்டில் ஒன்றைத்தான் வைத்துக் கொள்ள முடியும். இந்த இரண்டு பொறுப்புள்ள பதவியையும்—அதாவது பஞ்சாயத்து போர்டு தலைவராகவே இருந்துகொண்டு, பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் தலைவராகவோ, உபதலைவராகவோ இருக்க முடியாத நிலைமை ஏற்படுகிறது. அந்தமாதிரியான நிலைமை ஏற்படக்கூடாது என்பதற்காகத்தான் கனம் ஸ்ரீ சம்பத் அவர்கள் திருத்தம் கொண்டு வந்திருக்கிறார்கள். அவருடைய திருத்தம் ஏற்றுக்கொள்ளப்படுமானால் ஒருவர் பஞ்சாயத்து போர்டு தலைவராக இருக்கலாம். அதேசமயத்தில் சர்க்கார் இப்போது தற்காலிகமாக அமைக்க இருக்கிற பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் தலைவராகவோ, உபதலைவராகவோ பணியாற்ற முடியும். அரசாங்கத்தின் எண்ணம் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் என்பது முன்பு ஜில்லா போர்டுகள் இருந்த இடத்தில் இருப்பது போல அமையவேண்டும் என்றால் முன்பு இந்தப் பிரச்னை இல்லை. ஆகவே இன்றுள்ள நிலைமையில் என்ன செய்வது என்பதே பிரச்னை. நான் அரசாங்கத்திற்கு என்னுடைய எளிய, சிறிய யோசனையைச் சொல்ல விரும்புகிறேன். பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் தலைவர் அல்லது உபதலைவர் பொறுப்பை ஏற்பதன் காரணமாக—நோடிபிகேஷன் செய்கிற காலத்தில் இருந்து பஞ்சாயத்து தலைவர் பதவியை இழந்துவிடுவதாக இருந்தாலும் இது தற்காலிகமான ஏற்பாடு ஆகையால் முறைப்படி பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் தேர்தல் நடந்து தலைவர், உபதலைவர் தேர்ந்தெடுக்கிறபோது தற்காலிக

[Sri M. S. Selvarajan] [20th August 1960

ஏற்பாட்டினால் பஞ்சாயத்து தலைவர் பதவியை இழந்தவர்கள் திரும்பவும் அதே பதவிக்கு வரக்கூடிய வகையில் இந்தச் திருத்தச் சட்டத்தில் மாறுதல் செய்யப்படுமானால் திரு. சம்பத் அவர்களுடைய திருத்தத்திற்கு அவசியம் இல்லை. அம்மாதிரி திரும்பவும் வருவதற்கு ஒரு வாய்ப்பை அளிக்கலாம். கிராமப் புறங்களில் பஞ்சாயத்து அமைப்பை ஒரு போர்க்களமாக ஆக்க வேண்டுமென்று அரசாங்கம் நினைக்கவில்லை. இவற்றினால் கிராமங்களில் உள்ள சுமுகமான உறவு முறைகள் குறைந்துவிடக் கூடாது என்கிற எண்ணமும் சர்க்காருக்கு இருக்கிறது. சில அட்மினிஸ்ட்ரேடிவ் ஏற்பாடுகளின் மூலமாகவே எவ்விதச் சிக்கலும் ஏற்படாமல் செய்யக்கூடும். ஸ்ரீ. சின்னதுரை அவர்களும் பஞ்சாயத்து தேர்தல் சுமுகமாக முடிந்ததைப்பற்றி தம் கருத்தைத் தெரிவித்தார்கள், கட்சி ரீதியில் போட்டியிடாதது காரணமென்று. அது மாத்திரம் அல்ல. பல பஞ்சாயத்துத் தலைவர்கள் தேர்தல்கள் அட்ஜெஸ்ட்மென்ட் மூலமே நடந்தன. ஊரிலிருந்தே முழுநேரமும் பஞ்சாயத்தை கவனிக்கக் கூடியவர்கள் தலைவர் பொறுப்பு கொடுக்கப்பட்டனர். நன்கு படித்தவர்கள் கூட பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் தேர்தலை நினைந்து தலைவர் தேர்தல் போட்டியிலிருந்து விலகி நின்றனர் அல்லது சமாதானப் படுத்தப்பட்டனர். ஆனால் எந்தெந்த பஞ்சாயத்திலே இத்தகைய நிலையில் படித்தவர்கள் வக்கீல்கள் இன்னும் வேறு தொழில்களில் ஈடுபட்டுக்கொண்டிருப்பவர்கள்கூட பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு வர எதிர்பார்த்திருந்தார்களோ அவர்கள் இந்த சட்டத்தின் மூலம் வராமல் விலகிப்போகிறார்கள். அப்படி பரிசீலனை செய்து, மீண்டும் சட்டபூர்வமாக பஞ்சாயத்தில் கவுன்சிலுக்கு வருவதற்கு வாய்ப்பும், வசதியும் அரசாங்கம் அளிக்க முன்வரவேண்டும். அது கிராமத்தின் நலனைப் பாதுகாக்கவும், சீராக்குவதற்கும் உதவியாக இருக்கும் என்ற கருத்தைத் தெரிவித்துக்கொண்டு, இந்த மசோதாவை ஆதரித்து என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

**SRI M. R. KANDASWAMI MUDALIYAR :** கனம் தற்காலிக சபாநாயகர் அவர்களே, இந்தச் சபையின் முன் வைக்கப்பட்டிருக்கும் பஞ்சாயத்து திருத்த மசோதாவை நான் ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். மக்களிடத்திலே அதிகாரம் பரவி, நம்முடைய ஆட்சிநிலையை நன்றாக உணர்ந்து, தங்களுடைய பகுதியில் என்னென்ன காரியங்கள் செய்ய வேண்டுமோ அவைகளைச் செய்யவேண்டிய பொறுப்பை அவர்களிடத்திலே விட்டு, நல்லமுறையிலே நிர்வாகம் நடத்த ஜனங்களுக்கு நன்மை செய்யவேண்டுமென்ற நோக்கத்துடன்தான் வந்திருக்கிறது. இதிலே நடைமுறையிலே சில விஷயங்கள் பல பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களை அமைக்க அரசாங்கம் முன் கோளாறுகளினால் ஏற்படும் தவறான எண்ணத்தை மக்களிடத்திலே ஏற்படுத்தி, பஞ்சாயத்து யூனியன் இல்லாமல் இருந்தாலும் பாவாயில்லை, இவ்வளவு ஆண்டுகளுக்குப் பிறகும் விமோசனம்

இல்லையா என்று பொதுமக்கள் அதிருப்தி தெரிவிக்கக்கூடிய வகையில் பஞ்சாயத்து நிலைமை போகக்கூடாதென்ற எண்ணத்தினுல் சிற்சில விஷயங்களைச் சொல்ல விரும்புகிறேன்.

பஞ்சாயத்துக்கள் நல்ல முறையில் நடைபெறவில்லை. பல ஊழல்கள் அங்கே மலிகின்றன. தவருன முறையில் கணக்கு வைத்து, வசூல் செய்கின்ற பணத்தைக் கையாடல் செய்து கொண்டு பல பஞ்சாயத்துக்கள் இருக்கின்றன. இதற்குத் தகுந்த ஆதாரத்தோடு ரிகார்ட் பூர்வமாக ஒப்பித்தும்கூட இரண்டு ஆண்டுகள் ஆகியும் இதன்மீது நடவடிக்கை எடுக்கப்படாமல் இருக்கிறது. ஜில்லா பஞ்சாயத்து அதிகாரியிடத்திலே போய் "பணம் கையாடல் மோசடி செய்யப்பட்டிருக்கிறது. தவருன முறையில் பில்களை உபயோகித்து போர்ஜரி செய்திருக்கிருர்கள்" என்று சொல்லியும், அந்தக் கேஸ்களைக்கூட இவ்வளவு காலதாமதம் செய்து கொண்டிருக்கிருர்கள். ஆகையால் பொதுமக்கள் அதிருப்தி அடையக்கூடிய முறையில் இருக்கிருர்கள். ஜில்லா பஞ்சாயத்து அதிகாரி என்ன சொல்லுகிருர் என்ருல் "நாங்கள் என்ன செய்வது, அவர்கள் கௌரவ பிரிசிடெண்ட், அவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்க எனக்கு அதிகாரம் இல்லை, அதனுல்தான் அவர்கள் மீது நடவடிக்கை எடுக்காமல் இருக்கிருேம்" என்று. இந்த நிலைமை இருக்கும்போது ஜனங்களிடத்திலே பஞ்சாயத்தின்மீது அதிருப்தி உண்டாகக் காண்கிருேம். குறிப்பாக, இரண்டு பஞ்சாயத்துக்களில் நடந்த விஷயங்களை உதாரணமாகச் சொல்லுகிறேன்.

ஆட்டையம்பட்டி பஞ்சாயத்திலே ரசீதுகளில் பல விடுகளினுடைய நெம்பர்களை வேறு வீடுகளின் பேரின் போட்டு கணக்கில் வைக்காமல் ரசீதுகள் எழுதிக் கொடுத்திருக்கிருர்கள். இம்மாதிரி 100, 150 ரசீதுகளை அதிகாரியிடத்தில் ஒப்படைத்திருக்கிருேம். இந்தக் கிராமத்தில் பல பேர்களிடமிருந்து வசூல் செய்யும் பணத்தைக் கணக்கில் வரவு வைக்காமல் இருக்கிருர்கள். புகார் செய்து மூன்று மாதங்கள் ஆகியும் இன்னும் கவனிக்காமல் இருப்பதனுல் இந்தக் கிராம மக்கள் மிகவும் வருத்தப்படுகிருர்கள். ஜனங்களுடைய நன்மைக்காக பஞ்சாயத்துக்கள் ஏற்படவில்லை, பணத்தை மோசடி செய்வதற்காகத்தான் ஏற்பட்டிருக்கின்றன. பஞ்சாயத்துத்தலைவர்கள் என்ருல் பொதுமக்கள் பணத்தைப் பூராவும் சாப்பிடுவதற்குத்தான் இருக்கிருர்கள் என்று பொதுமக்கள் எண்ணுகிருர்கள். குறிப்பிட்ட வேலைக்காக பஞ்சாயத்துக்களில் பணம் ஒதுக்கப்பட்டிருந்தால், அந்த வேலை நடைபெறுவதில்லை. அதாவது ரோடுபோடுவதற்காக பணம் ஒதுக்கப்பட்டிருந்தால், அந்த ரோடைப் போடாமலேயே, கணக்கில் வைத்துவிடுவார்கள். இந்தமாதிரி பலவேலைகள் செய்யாமல் பணத்தை சாப்பிட்டுவிட்டு, பல வேலைகள் செய்ததாக கணக்கு எழுதிவிடுவார்கள். இதை அதிகாரியிடம் புகார் செய்திருந்தும், இம்மாதிரி பணத்தை தவருன முறையில் மோசடி செய்திருக்கிருர்கள், உடனடியாக கவனிக்க வேண்டுமென்ருலும் அவர்கள்

நாங்கள் என்ன செய்வது, எங்களுக்கு அதிகாரம் இல்லை, என்று சொல்லிவிடுகிறார்கள். மேலும் அதிகாரிகள் பஞ்சாயத்துகளை பார்வையிடுவதற்காக வரப்போவதாக நோட்டீஸ் கொடுத்திருந்தாலும், தபால் அனுப்பினாலும், அந்தச்சமயம் பார்த்து பஞ்சாயத்தில் இருப்பவர்கள் ஊரில் இருப்பதில்லை. கணக்கை பரிசீலனை செய்வதற்கு வருவதாக அதிகாரிகள் தெரிவித்திருந்தும், இரண்டு மூன்று முறையும், பஞ்சாயத்திலுள்ளவர்கள் ஊரில் இல்லை. அப்படி அதிகாரிகளினுடைய உத்தரவை மதிக்காததற்கு, பிரசிடண்ட் மீது நடவடிக்கை எடுக்க அவருக்கு அதிகாரம் இல்லை என்று சொல்கிறார். ஓரளவு கௌரவ பிரசிடண்டாக இருந்தாலும், பணத்தை மோசடி செய்வதாக இருந்தால் இதைப் பெரிய குற்றமாக அரசாங்கம் கருதவேண்டும். நிர்வாக அனுபவம் இல்லாத காரணத்தால் சிறிய தவறுகள் ஏற்படுவது சகஜம், அதை மன்னிக்க வேண்டியதுதான். ஆனால், வேண்டுமென்றே பணத்தை கையாடல் செய்து மறுபடியும் போர்ஜரி செய்து பில்களை தயாரித்து, வசூலிக்கும் பணத்தை கணக்கில் வைக்காமல் மோசடி செய்வார்களானால் அதற்கு கடுமையான நடவடிக்கை எடுத்தால் நிர்வாகம் நல்லமுறையில் நடைபெறும், பொதுஜனங்களுக்கு அப்பொழுதுதான் நம்பிக்கை ஏற்படுவதற்கு ஏதுவாக இருக்கும். பின்னால் தலைவராக வருகிறவர்கள் நல்ல முறையில் வேலை செய்வார்கள்.

பஞ்சாயத்து பிரெசிடெண்டாக இருப்பவர்கள் பஞ்சாயத்திலே இருக்கும் பணத்தை எவ்வளவு மோசடி செய்து பணத்தை சாப்பிட்டுவிட்டாலும் அவர்களுக்கு சொத்து இருந்தால்தான், மோசடி செய்த அளவிற்கு பணத்தை அவர்களிடமிருந்து வசூல் செய்யலாம் என்று இருக்கிறது. சொத்து இல்லையென்றால் அவர்கள் மீது எந்தவிதமான நடவடிக்கையும் எடுப்பதில்லை. அப்படியானால் ஒன்றுமே சொத்தில்லாதவர் பஞ்சாயத்துத் தலைவராக வந்தால், அவருக்கு சொத்து இல்லை என்ற காரணத்தால் மோசடி செய்தாலும் நம்மை ஒன்றும் செய்ய முடியாது என்று தைரியமாக தவறான முறையில், 10 ஆயிரம் ரூபாய் வேண்டுமானாலும் மோசடி செய்ய ஏது இருக்கிறது.

இதுமாதிரிதான் சென்னைகிரி பஞ்சாயத்திலும் 6,000, 7,000 ரூபாய் வரை செலவு செய்யாமல் கணக்கு எழுதியிருக்கிறார்கள்.

**THE HON. SRI C. SUBRAMANIAM** : சொல்வதைச் சுருக்கமாகச் சொல்லுங்கள்.

**SRI M. R. KANDASWAMI MUDALIYAR** : கோர்ட்டுக்குப் போய் கோர்ட்டிலே இருக்கும் மாஜிஸ்ட்ரேட் பஞ்சாயத்து ஆபீசருக்கு எழுதக்கூடிய அளவிற்கு இருக்கிற காரணத்தால் இதை கனம் அமைச்சர் அவர்கள் கவனத்திற்குக் கொண்டுவர நினைக்கிறேனே தவிர வேறொன்றும் இல்லை. இம்மாதிரி இடையூறுகள் இருப்பதனால் உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளக்கூடிய முறையில் பஞ்சாயத்து சட்டத்தை திருத்துவது நல்லது என்ற

20th August 1960] [Sri M. R. Kandaswami Mudaliyar]

நோக்கத்தோடுதான் இதைச் சொல்ல ஆசைப்படுகிறேன். ஸ்ரீ. சம்பத் அவர்களும், ஸ்ரீ. செல்வராஜ் அவர்களும் குறிப்பிட்டார்கள். பஞ்சாயத்துத் தலைவராக இருக்கக்கூடியவர்கள் யூனியன் தலைவராக வந்துவிட்ட காரணத்தால், பஞ்சாயத்து தலைவர் ஸ்தானத்தில் காலி ஏற்படுகிறது. அப்போது ஒருவர் தலைவராக தேர்ந்தெடுக்கப்படுகிறார். பஞ்சாயத்துத் தலைவராக இருப்பவர்களே மறுபடியும் பஞ்சாயத்து யூனியன் தலைவராக வரவேண்டுமென்று சொன்னால் இதில் பல சிக்கல்கள் ஏற்படுமென்று கருதுகிறேன். பஞ்சாயத்துத் தலைவர் யூனியன் தலைவராக மறுபடியும் வரவேண்டுமானால் இதற்கு இரண்டு தேர்தல் நடத்த வேண்டியிருக்கிறது. தற்காலிகமாக ஒரு தலைவர் தேர்ந்தெடுக்கப் பட்டபின், ஏற்கெனவே இருந்த ஒருவரை திரும்பவும் அதே ஸ்தானத்திற்கு வருவது பொருத்தமாக இருக்காது என்று சொல்லி இந்த சபையில் வந்திருக்கும் திருத்த மசோதாவை ஆதரித்து இப்பொழுது சொல்லியிருக்கக்கூடிய குறைபாடுகளை நீக்கி சட்டமாக அமைக்குமாறு கேட்டுக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

(Mr. Speaker in the Chair.)

SRI V. K. RAMASWAMY MUDALIYAR: கனம் சபாநாயகர் அவர்களே, சர்க்கார் கொண்டு வந்திருக்கக்கூடிய இந்த யூனியன் பஞ்சாயத்து கௌன்ஸில் திருத்த மசோதாவை நான் முழு மனதுடன் ஆதரிக்கிறேன். சமீபத்தில் பஞ்சாயத்து போர்டுகளில் எல்லாம் தேர்தல் நடந்தது. அதன் பிறகு பஞ்சாயத்து கௌன்ஸில்களுக்கு பிரதிநிதிகளை அனுப்ப வேண்டுமென்று மறுபடியும் ஒரு தேர்தல் நடந்தது. அதன் காரணமாக அநேக இடங்களில் பெரிய குழப்பங்கள் ஏற்பட்டு மக்களுக்கு ஒரு பயத்தை உண்டு பண்ணி விட்டது. பழைய நாட்களில் ஜில்லா போர்டு தேர்தல்கள் நடக்கும்போது பார்த்திருக்கிறேன். ஜில்லா போர்டு தலைவர் தேர்தல் நடக்கும் போதெல்லாம் அநேக அங்கத்தினர்களை இடம் தெரியாத பிராந்தியங்களுக்குக் கொண்டு போய் விட்டு மறுபடியும் தேர்தலுக்குப்பின் அவர்களை கொண்டு வந்து விடுவது வழக்கம். அப்படி பஞ்சாயத்து தேர்தல்கள் நடக்கும் போது பலவித குழப்பங்கள் ஏற்பட்டு அதனால் அநேகம் பேர்கள் பெரிய கஷ்டங்களுக்கு உள்ளானார்கள். இவைகளை எல்லாம் யோசித்துப் பார்த்தால் பஞ்சாயத்து போர்டு தேர்தல் நடந்த பிறகு, கௌன்ஸிலுக்கு பிரதிநிதிகள் அனுப்புகிற போது மறுபடியும் ஒரு தேர்தல் அவசியமா என்பது பற்றி எல்லோரும் பரிசீலித்துப் பார்த்தோம். அம்மாதிரியான தேர்தல் அவசியமில்லை, பஞ்சாயத்து போர்ட் பிரிஸிடென்ட்களே கௌன்ஸிலில் பிரதிநிதிகளாகச் சென்று அங்கு பணியாற்றலாம் என்பது பற்றி பொறுக்குக் குழுவினர் தீர்க்க ஆலோசனை செய்தனர். ஆகவே, இப்பொழுது சர்க்கார் கொண்டுவந்திருக்கும் மசோதாவானது பஞ்சாயத்து போர்டு பிரசிடென்ட்களே பஞ்சாயத்து 10–30 a.m.

கௌன்ஸில் பிரதிநிதிகளாக இருக்கலாம் என்பதுதான். இப்பொழுது 75 யூனியன் கௌன்ஸில்களுக்கு போட்டிருக்கிறார்கள். பின்னால் அதை விஸ்தரிக்கும்போது ஒவ்வொரு பிராந்தியத்திற்கும் இது அமுலுக்கு வரும். இந்த 5 வருடக் கட்டத்தை நாம் பார்த்து அப்படி ஒரு வேளை அது நல்லமுறையில் நடக்காவிட்டால் பின்னால் யோசிக்கலாம். இப்பொழுது பஞ்சாயத்து போர்டு பிரசிடென்ட்களே யூனியன் கௌன்ஸிலில் உறுப்பினர்களாக இருப்பதுதான் உசிதம். ஆகவே இந்த மசோதாவை நான் முழு மனதுடன் ஆதரிக்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவிற்கு அநேகமாக எல்லாக் கட்சியினரிடமிருந்தும் ஆதரவு கிடைத்திருக்கிறது. இந்த மசோதாவின் முதல் மசோதா எந்த முறையில் எல்லாக் கட்சித் தலைவர்களாலும் பரிசீலிக்கப்பட்டு அவர்களின் ஆதரவையும் பெற்று இந்தச் சபையின் முன் கொண்டு வரப்பட்டதோ, அதேபோல்தான் இந்தத் திருத்த மசோதாவும் அந்த அடிப்படையிலேயே அந்தக் குழுவின் முன்னால் வைத்து அவர்கள் சம்மதத்தைப் பெற்று இங்கு கொண்டு வரப் பட்டிருக்கிறது. ஆகவே, பஞ்சாயத்து சட்டத்தைப் பொறுத்த வரையில், இதில் கட்சி வேற்றுமையில்லாமல் ஒப்புக் கொள்ளக் கூடிய முறையில் பஞ்சாயத்து சட்டம் நிறைவேறுவது என்பது மட்டுமல்ல திருத்தம் கொண்டு வரக் கூடிய காலத்திலும் அவர்களை கலந்து ஆலோசித்து அவர்கள் ஒத்துக் கொள்ளக்கூடிய முறையில் இந்தத் திருத்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. அதேபோன்று இதை அமுல் நடத்தக் கூடிய காலத்திலும் கட்சிப் பிரதி கட்சிகள் என்ற அடிப்படையில் இல்லாது, எந்த முறையில் நடைபெற்றால் அந்தப் பிரதேசத்திற்கு நன்மை விளையுமோ அந்த முறையில் நடப்பதற்கும் நாம் ஏற்பாடு செய்யவேண்டியது அவசியமாக இருக்கிறது. சின்னதுரை அவர்கள் பஞ்சாயத்து தேர்தல்களைப் பற்றி குறிப்பிட்டு கட்சி அடிப்படையில் தேர்தல்கள் நடக்கக் கூடாது என்று கருத்து தெரிவித்தார்கள். சென்னையைப் பொறுத்த வரையில் காங்கிரஸ் ஸ்தாபனம் இதை ஒப்புக் கொண்டு கட்சி அடிப்படையில் எந்த இடத்திலும் பஞ்சாயத்தில் போட்டியிடவில்லை. இரண்டு கட்சிகள் சிலயிடங்களில் அதுமாதிரி போட்டியிட்டார்கள். கட்சி சார்பாக போட்டியிட்டார்கள். அதில் அதிக லாபம் இல்லை என்று விட்டு விட்டார்கள் என்று நினைக்கிறேன். அது ரொம்பவும் நல்லது. பஞ்சாயத்துகளில் கட்சிப் பிரதி கட்சிகள் வைத்து நடத்துவதை விட, யார் அந்தக் கிராமத்தில் நல்ல வேலை செய்வார்கள் என்பது அந்த கிராமத்திலுள்ளவர்களுக்கு தெரியும். சட்டசபை போல் பெரிய தொகுதியாக இருந்தால் எந்தக் கட்சியைச் சார்ந்தவர் என்று வைத்து அநேகமாக மக்கள் முடிவு செய்ய வேண்டியிருக்கும். கிராமங்களானால், ஒருவரை ஒருவர் நன்கு தெரிந்து கொண்டிருப்பார்கள், யார் நியாயமாக, நேர்மையாக, திறமையாக வேலை செய்வார்கள் என்பது பற்றி அவர்களுக்கு சந்தேகம் இருக்கமுடியாது. ஆகவே, அந்த அடிப்படையில் இருக்க வேண்டும். இன்னும் தொடர்ந்து அந்த அடிப்படையில் நடத்த வேண்டுமென்பதுதான் சர்க்காரின்

20th August 1960] [Sri C. Subramaniam]

நோக்கமும், காங்கிரஸ் கட்சியின் நோக்கமும். ஏதோ சஞ்சீவி ரெட்டியார் அவர்கள் தெரிவித்ததாக ஒரு கருத்து தெரிவித்தார்கள். நான் அதைப் பார்க்கவில்லை. அதுமாதிரி தனிப்பட்ட கருத்து தெரிவித்ததாக நான் பார்க்கவில்லை. இதற்கு முன்னால் தயார் செய்த குறிப்பு வெளி வந்தது. அதை சஞ்சீவி ரெட்டியார் அவர்களின் குறிப்பு என்று எடுத்துக் கொண்டார்கள் என்று நினைக்கிறேன். அந்தக் குறிப்பை ஒருவரும் ஒத்துக் கொள்ளவில்லை. பஞ்சாயத்து தேர்தல்களில் கட்சி அடிப்படையில் போட்டியிட வேண்டுமென்று எந்தவிதமான முடிவும் ஒருவரும் எடுக்கவில்லை. தலைவர் அவர்கள் அப்படி சொன்னதாக என் கவனத்திற்கு கொண்டு வரப்படவில்லை. இங்குள்ள இந்தக் கொள்கை நீடித்து இருக்கவேண்டுமென்பதுதான் என் கருத்து. அடுத்தபடியாக, இந்த மசோதா கொண்டு வந்திருப்பது, நல்ல சூழ்நிலையில் இந்த பஞ்சாயத்து யூனியன் கௌன்ஸில்கள் அமுலுக்கு வரவேண்டுமென்றுதான் அந்த அடிப்படையில்தான் இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. ஆனால் அந்த சூழ்நிலை, தேர்தல் இல்லாததால் மட்டும் நல்ல சூழ்நிலை வந்து விடாது. எலெக்ஷன் வந்தால் சூழ்நிலை கெடலாம். நல்ல சூழ்நிலை ஏற்பட வேண்டுமென்றால் இந்தச் சட்டத்தை அமுல் நடத்தக் கூடியவர்களும் மக்களும் நன்கு பஞ்சாயத்து சட்டத்தைப் பற்றி தெரிந்து கொள்ள வேண்டும். மக்கள் பிரதிநிதிகளும் இது பற்றி நன்கு தெரிந்து கொண்டிருக்க வேண்டும். யூனியன் கௌன்ஸிலில் அங்கம் வகிக்கக் கூடியவர்களும் இது பற்றி நன்கு தெரிந்து கொண்டிருக்க வேண்டும். பஞ்சாயத்து சட்டத்திலுள்ள பல்வேறு அம்சங்கள் என்ன? அதில் ஒவ்வொருவருக்கும் உள்ள கடமை என்ன, உரிமை என்ன என்று தெரிந்து கொண்டால்தான் நல்ல சூழ்நிலை ஏற்படும். அதனால் பல கருத்தரங்குகள் ஏற்படுத்தி இதுபற்றி விவாதிக்க ஏற்பாடு செய்யப்பட்டு, சில ஜில்லாக்களை ஒன்றாகக் கூட்டி அங்குள்ள சில பிரதிநிதிகளைக் கூட்டி கருத்தரங்குகள் நடைபெற்றது. இனி ப்ளாக் அளவில் நடைபெறச் செய்ய வேண்டும். பின் கிராம அளவில் நடைபெறச் செய்து இந்தச் சட்டத்தின் நுணுக்கங்கள் எல்லோருக்கும் தெரியும்படி ஏற்பாடு செய்து அந்த அடிப்படையில் காரியங்களை நன்கு செய்வதற்கு நாம் ஏற்பாடு செய்ய வேண்டுமென்ற கருத்தையும் வலியுறுத்தி சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே, இந்தச் சட்டத்தை நிறைவேற்றுவது மட்டுமல்ல, பஞ்சாயத்துக்கள், யூனியன் கௌன்ஸில்கள் நடைபெறுவதில் இதே போன்ற சுமுகமாக சூழ்நிலை, கட்சிப் பிரதி கட்சிகள் என்ற அடிப்படையில் இல்லாமல் ஒற்றுமையாக இருந்து அங்குள்ள நிர்வாகத்தை நடத்துவதற்கு முன்வருவார்களானால் மிகவும் நல்லது, அப்படிச் செய்யவேண்டும். பஞ்சாயத்து யூனியன்கள் செய்ய வேண்டியது, அவர்கள் செய்ய வேண்டிய பணிகள் மிகப் பொறுப்புள்ளவை. மிகப் பெரிய பொறுப்புகள் எல்லாம் அவர்களிடம் ஒப்புவிக்கப்பட்டிருக்கின்றன. அப்பகுதிகளில் ஏற்படக்கூடிய அபிவிருத்தித் திட்டங்களை அவர்களே ஏற்று நடத்த வேண்டும். கம்யூனிட்டி டெவலப்மென்டின்கீழ் நடக்கிற எல்லா அபிவிருத்திப் பணிகளையும் அவர்களே செய்யவேண்டுமென்று ஏற்பாடு செய்திருக்கிறோம். அவைகளை எல்லாம் வெற்றிகரமாக செய்வது,

மக்களுக்கு புது சௌகரியங்கள், புது வசதிகள், புது வாழ்வு ஏற்பட வேண்டுமென்றால் பஞ்சாயத்துக்கள், பஞ்சாயத்து யூனியன் கௌன்ஸில்கள் எப்படி நல்லமுறையில் இயங்குகின்றன என்பதைப் பொறுத்திருக்கிறது. அதற்கு எல்லா அங்கத்தினர்களும், கட்சிப் பிரதி கட்சி இல்லாது என்று மட்டுமல்லாது, ஓரளவு அக்கரை எடுத்துக்கொண்டு நல்லமுறையில் அவை நடக்க உதவி செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு இந்த மசோதாவை ஏகமனதாக ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : The question is—

"That the Madras Panchayat Union Councils (Special Provisions for First Constitution) Bill, 1960 (L.A. Bill No. 19 of 1960), be taken into consideration".

The motion was put and carried, and the Bill was taken into consideration.

MR. SPEAKER : Now we will take up the clause-by-clause consideration of the Bill.

*Clause* 2.

MR. SPEAKER : The motion is—

"That Clause 2 do stand part of the Bill".

SRI S. M. ANNAMALAI : Sir, I move the following amendment :

"*Omit* sub-clause 1 (*b*)".

The amendment was duly seconded.

THE HON. SRI C. SUBRAMANIAM : Instead of the hon. Member Sri T. Sampath's amendment, I beg to move the following amendment :—

In Clause 2—

(1) *omit* the word "and" occurring at the end of sub-clause (1) (*d*).

(2) *add* the following at the end, namely :—

and

(*c*) the president shall not cease to hold office as such on his election as chairman or vice-chairman of the panchayat union council referred to in clause (*a*)."

20th August 1960]

MR. SPEAKER : The Clause and the amendments are before the House for discussion.

SRI S. M. ANNAMALAI : நான் கொடுத்திருக்கக் கூடிய திருத்தம் " omit sub-clause 1 (b) " என்பதாகும். அதற்கு முக்கியமான காரணம் என்னவென்றால்,

" the term of office of members of the panchayat union council referred to in clause (a) shall be such as the State Government or any officer authorised by them in this behalf may, by notification, specify "

என்று சொல்லப்பட்டிருக்கிறது. என்னைப் பொறுத்தவரையில் நான் சொல்வேன், எப்படி தேர்தல்கள் அடிக்கடி நடந்தால் கிராமங்களில் குழப்பம் ஏற்படுகிறது என்று சொல்கிறார்களோ அதேபோல் பஞ்சாயத்து போர்டு தலைவர்கள் பஞ்சாயத்து யூனியன் கௌன்ஸில் மெம்பர்களாகிவிட்ட பிறகு, இந்த யூனியன் கௌன்ஸில் ஆரம்பிக்கப்பட்ட பிறகு ஐந்து வருடங்கள் அவர்கள் நீடித்திருக்கலாம் என்பது என் அபிப்பிராயம். காரணம் என்ன வென்றால், இதற்கு மத்தியில் இரண்டு, மூன்று வருடங்கள் என்று வைப்போமானால் மறுபடியும் இடையில் மறு பரிசீலனை செய்து இந்தச் சட்டத்திற்கு ஒரு திருத்தம் கொண்டு வந்து அதற்கு மேற் பட்டு ஒரு தேர்தல் நடத்தி அதனால் கிராமங்களில் குழப்பம் ஏற்படக்கூடாது. மூன்றாவது ஐந்தாண்டு திட்டம் வருகிற நேரத்தில் மூன்றாவது ஐந்தாண்டு திட்டம் முடிகிறவரையில் அவர்களே தொடர்ந்து இருக்கலாம் ஐந்து வருட காலத்திற்கு இந்தச் சட்டப்படி. அந்தக் காரணத்தையொட்டித்தான் இந்தத் திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். ஆகவே சர்க்கார் இதை பரிசீலனை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அண்ணாமலை அவர்கள் கொண்டு வந்திருக்கும் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள முடியாமல் இருக்கிறது. இங்கே இதில் 'பி' விதி போடப்பட்டிருப் பதற்குக் காரணம், பல பஞ்சாயத்துகளில் பல காலங்களில் தேர்தல் நடந்திருக்கிறது. அதில் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதி நிதிகளின் காலம் எல்லாம் ஒரே சமயத்தில் முடிவு அடையாது. சில இடங்களில் மூன்று மாதங்கள் என்று இருக்கலாம், சில இடங் களில் ஆறு மாதம் என்று இருக்கலாம், சிலயிடங்களில் ஒரு வருடம் என்று இருக்கலாம். ஆகவே எல்லா பஞ்சா யத்து மெம்பர்களுக்கும் ஒரே காலத்தில்தான் பதவி காலம் தீருகின்றது என்று சொல்ல முடியாது. ஆகவே பஞ்சா யத்து யூனியன் கலைகிற வரையிலும் இந்தப் பிரதிநிதிகள் இருக்கத்தான் வேண்டியிருக்கிறது. அதற்காகத்தான் இந்த 'பி' விதி போட வேண்டியிருக்கிறது. இன்னும் ஒன்றிரண்டு வருடங் களில் எல்லா பஞ்சாயத்து யூனியன்களும் அமைக்கப்பட்டு விடும். அதோடு எல்லா பஞ்சாயத்துக்களுக்கும் தேர்தல் நடக்க ஏற்பாடு செய்யவேண்டும். இதற்கு மத்தியிலே இப்போது இருக்கின்ற வர்களை வெளியே போங்கள் என்று சொல்ல முடியாது என்பதை

தெரிவித்துக்கொள்கிறேன். இன்னொரு சந்தேகத்தை கனம் சின்ன துரை அவர்கள் தெரிவித்தார்கள். அரிஜனங்களுக்கும் பெண்களுக்கும் இதில் பிரதிநிதித்துவம் இல்லையென்றால் என்ன செய்வது என்று தெரிவித்தார்கள். இதற்காக சப்-கிளாஸ் 2-ல் . .

" Save as otherwise provided in sub-section (1), all the provisions of the said Act shall apply to the panchayat union council referred to in that sub-section and to the members of that panchayat union council."

என்று போடப்பட்டிருக்கிறது. பஞ்சாயத்து யூனியன் அமைத்ததற்குப் பின்னால் அதில் அரிஜனங்களோ அல்லது பெண்களோ இல்லையென்றால் பின்னால் சேர்த்துக்கொள்வதற்கு வழியிருக்கிறது. ஆகவே பெண்களையும் அரிஜனங்களையும் சேர்ப்பதற்கும் இருந்த வழி அடிபட்டு போகவில்லை என்பதை தெரிவித்துக்கொண்டு, கனம் அண்ணாமலை அவர்கள் கொடுத்து இருக்கும் திருத்தத்தை வலியுறுத்தாமல் இருக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

The amendment of Sri S. M. Annamalai was, by leave, withdrawn.

MR. SPEAKER : I shall put the Government amendment to vote. The question is—

" In Clause 2—

(1) *omit* the word " and " occurring at the end sub-clause (1) (*a*).

(2) *add* the following at the end, namely :—

" and

(*c*) the president shall *not* cease to hold office as such on his election as chairman or vice-chairman of the panchayat union council referred to in clause (*a*)."

The amendment was put and carried.

Clause 2, as amended, was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

" That the Madras Panchayat Union Councils (Special Provisions for First Constitution) Bill, 1960 (L.A. Bill No. 19 of 1960), as amended, be passed."

MR. SPEAKER : The question is—

' That the Madras Panchayat Union Councils (Special) Provisions for First Constitution) Bill, 1960 (L.A. Bill No. 19 of 1960), as amended, be passed.'

The motion was put and carried, and the Bill as amended was passed.

(2) THE INDUSTRIAL EMPLOYMENT (STANDING ORDERS) (MADRAS AMENDMENT) BILL, 1960 (L.A. BILL NO. 14 OF 1960).

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Speaker, Sir, I move—

"That the Industrial Employment (Standing Orders) (Madras Amendment) Bill, 1960 (L.A. Bill No. 14 of 1960), be taken into consideration."

கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா கொண்டு வந்திருப்பதின் நோக்கம் என்னவென்றால், நூறு பேர்களுக்குமேல் வேலை செய்யும் இடங்களில் எல்லாம் ஸ்டான்டிங் ஆர்டர் நிறுவப்பட வேண்டும், என்று சொல்லப் பட்டிருப்பதில் ஏற்படும் கஷ்டங்களை போக்குவதற்குத் தான். இவ்விதம் ஸ்டான்டிங் ஆர்டர்களை நிறுவும்போது அதை ஏற்றுக்கொள்ள வேண்டிய ஆபீஸர் லேபர் கமிஷனராக இருக்கவேண்டும் என்று மத்திய சர்க்காருடைய சட்டத்தில் இருக்கிறது. ஆனால் நம் ராஜ்யத்தைப் பொறுத்தவரையில் எல்லா இடங்களிலுள்ள தொழிற்சாலைகளிலுள்ள ஸ்டான்டிங் ஆர்டரை சர்டிபை செய்ய வேண்டுமென்றால், சற்றேறக்குறைய நமது ராஜ்யத்தில் 4,500 பாக்டரிகள் இருக்கின்றன. இவை எல்லா வற்றிற்கும் லேபர் கமிஷனர் போய் விசாரணை செய்வது என்பது இயலாத காரியமாக இருக்கிறது. ஆகவே இந்தத்திருத்த மசோதா வின் மூலமாக இதைப்பற்றி விசாரணை செய்து சர்டிபை செய்வ தற்கு லேபர் கமிஷனர் அவர்களால் நியமிக்கப்படும், அல்லது அதிகாரப்படுத்தப்படும் ஆபீசர்களுக்கு அதிகாரம் கொடுக்கலாம் என்றுள்ள திருத்த மசோதாவைத்தான் இப்போது கொண்டு வந்திருக்கிறேன். இந்த மசோதா தயாரித்தபோது சர்டிபை செய்வதற்கு கட்டணம் வசூல் செய்யலாம் என்று நினைத்தோம், இதுவரை கட்டணம் எதுவும் வசூல் செய்யவில்லை. பின்னால் இதைப்பற்றி பரிசிலனை செய்தபோது இம்மாதிரியான கட்டணம் வசூலிக்கவேண்டிய தேவையில்லை என்று சர்க்கார் தீர்மானித்தது. அதைப்பற்றி கூறப்பட்டிருக்கும் 3-வது கிளாஸை இந்த மசோதா நிறைவேற்றும்போது எடுத்துவிடக்கூடிய முறையில் அதை நான் பிரேரேபிக்காமல் இருக்கிறேன். இதை ஏன் இப்போது சொல்லு கிறேன் என்றால் இதில் கட்டணம் வசூல் செய்யக்கூடாது என்று அங்கத்தினர்கள் சொல்லவேண்டிய தேவையில்லை என்பதற் காகத்தான். ஆகவே இந்தத் திருத்த மசோதாவை பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

SRI P. S. CHINNADURAI : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தத் திருத்த மசோதாவை நான் வரவேற்கிறேன். ஆனால் இதில் ஒரு யோசனை சொல்ல விரும்புகிறேன். இப்போது லேபர் கமிஷனர் ஸ்டான்டிங் ஆர்டர் சம்பந்தமாக இறுதியாக உத்தரவிடும் அதிகாரியாக இருப்பது ஒரு வகையில் மிகவும் சௌகரியமாக இருக்கிறது. ஸ்டான்டிங் ஆர்டர்ஸ் பல்வேறு தொழிற்சாலைகளில் போட்டு ஒரே மாதிரியான கொள்கையை அனுசரிப்பதற்கு அவர் துணையாக இருக்கிறார். யார் லேபர் கமிஷனராக வந்தாலும் பல்வேறு தொழிற்சாலைகளுக்குரிய

[P. S. Chinnadurai] [20th August 1960

ஸ்டான்டிங் ஆர்டர்களை திருத்தி அமைப்பதற்கு உரிய அதிகாரத்தை இதுவரை அவரே பெற்றிருந்தார். இதன் மூலமாக ராஜ்யம் பூராவுக்குமாக ஒரு நிரந்தரமான கொள்கையைக் கொண்டு வருவதற்கு வாய்ப்பு இருக்கிறது. நாளை இதே அதிகாரத்தை லேபர் கமிஷனர் பலருக்கு மாற்றிக்கொடுக்கும் போது, ராஜ்யம் பூராவுக்குமாக ஒரே மாதிரியான கொள்கை, ஒருமுகமான விதிகள் இருக்குமா என்ற ஐயப்பாடு எனக்கு எழுகிறது. இப்போது லேபர் கமிஷனர் அவர்களிடம் இருக்கின்ற அதிகாரத்தை மூன்று நான்கு பேர்களுக்கு மாற்றிவிடுகின்ற பொழுது, இந்த மூன்று நான்கு பேர்கள் ராஜ்யத்தின் வெவ்வேறு பகுதியில் இருப்பார்கள், அந்த இடங்களில் எல்லாம் வெவ்வேறு விதமான விதிகள் புகுந்து விடுவதற்கு இடமளித்துவிடுவார்களோ என்ற ஐயப்பாடு எழுகிறது. அப்படியில்லாமல் கொள்கை சம்பந்தப்பட்ட வரையில் ராஜ்யம் முழுமைக்கும் ஒரே மாதிரியாக இருக்க வேண்டும் என்ற முறையில் லேபர் கமிஷனர் அவர்களால் நியமிக்கப்படுகின்றவர்களுக்கு சரியான தகவல்களை கொடுப்பார்கள் என்பதற்கு ஒரு உறுதிமொழி அரசாங்கத் தரப்பிலிருந்து வருமானால், இந்த மசோதாவை நான் முழு மனதுடன் ஆதரிக்கத் தடையில்லை. இதனால் இன்னொரு சௌகரியமும் ஏற்படுகிறது. லேபர் கமிஷனர் ராஜ்யம் பூராவுக்கும் சுற்றிக்கொண்டிருக்க தேவையில்லை. அங்கங்கு இருக்கின்ற லேபர் இன்ஸ்பெக்டர்களுக்கோ அல்லது பாக்டரி இன்ஸ்பெக்டர்களுக்கோ இந்தப் பொறுப்பை அளிப்பதாக இருக்கலாம். ஆகையினால் இந்த சௌகரியத்தை ஏற்படுத்துகின்றபொழுது கொள்கை சம்பந்தமான முரண்பாடு இல்லாமல் பார்த்துக்கொள்ள வேண்டும் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

மேலும் ஸ்டான்டிங் ஆர்டர் இப்போது இருக்கிற நிலைமையில் லேபர் கமிஷனர் அவர்களுக்கு சர்டிபை செய்வதற்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருந்தாலும் அதன்மேல் அப்பீல் பண்ணுவதற்குரிய உரிமையும் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் இந்த உரிமையை தொழிலாளர்கள் பயன்படுத்திக்கொள்வதற்குப் பதிலாக பெரும்பாலும் தொழிற்சாலை அதிபர்கள்தான் பயன்படுத்திக்கொண்டிருக்கிறார்கள். இந்த நிலைமையை மாற்றுவதற்கு அரசாங்கம் முயற்சிக்க வேண்டும். அதோடு இன்னொன்றையும் நாம் கவனிக்க வேண்டும். ஸ்டான்டிங் ஆர்டர் எல்லாம் முற்போக்கு காலத்திற்கு ஏற்றவாறு அமையவில்லை. உதாரணமாக இப்போது இருக்கின்ற ஸ்டான்டிங் ஆர்டரில் 58 வயதிற்கு மேல் உள்ளவர்கள் வேலையிலிருந்து ஓய்வு பெற்றுக்கொள்ள வேண்டும் என்று இருக்கிறது. ஆனால் இம்மாதிரிப்பட்டவர்கள் ஓய்வு பெறும்போது அவர்கள் பென்ஷன் பெறுவதற்கோ அல்லது மொத்தமாக ஏதாவது உபகாரச் சம்பளம் போன்று கிடைப்பதற்கோ வேண்டிய ஷரத்தை இந்த ஆர்டரில் சேர்ப்பதற்கு லேபர் கமிஷனருக்கு அதிகாரமில்லை என்று தெரிகிறது. இம்மாதிரிப்பட்ட பல வசதிகள் செய்து கொடுப்பதற்கு மாடல் ஸ்டான்டிங் ஆர்டரில் வழிவகை செய்யப்படவில்லை. ஆகவே ஏற்கனவே இருக்கின்ற மாடல் ஸ்டான்டிங் ஆர்டரை மாற்றி தொழிற்சாலைகளுக்கு தகுந்தவாறு மாற்றி அமைக்கவேண்டும். இன்றைக்கு காலத்திற்கு ஏற்றவாறு

20th August 1960] [Sri P. S. Chinnadurai]

தொழில் உறவு கொள்கையும் மாறிக்கொண்டிருக்கிறது என்பதை சர்க்காருக்கு நினைவுபடுத்த விரும்புகிறேன். ஆகவே, ராஜ்ய சர்க்கார் இதில் கவனம் செலுத்தி ஸ்டான்டிங் ஆர்டரில் காலத் திற்கு ஏற்றவாறு திருத்தம் கொண்டுவரவேண்டும். இப்போது இல்லாவிட்டாலும் இனிமேல் இதற்கான திருத்தம் கொண்டு வர முயற்சிக்க வேண்டுமென்றுக் கேட்டுக்கொண்டு முடித்துக்கொள் கிறேன்.

SRI J. MATHA GOWDER : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவானது தொழிற்சாலைகளுக்காக ஸ்டாண்டிங் ஆர்டர் கொடுப்பதை ஸர்டிபை செய்வதிலே லேபர் கமிஷனர் தங்களுடைய அதிகாரத்தை மற்றவர்களுக்குப் பிரித்துக் கொடுப் பதற்காகக் கொண்டுவரப்பட்டுள்ளது. மத்திய சர்க்காரிலே லேபர் கோர்டிலே ஏற்படுத்தியிருக்கக் கூடிய அந்த சட்டப்படி, லேபர் கமிஷனர் செய்ய வேண்டியதை இன்னொருவர் செய்யும்போது சட்டம் இயற்றித்தான் செய்யவேண்டுமென்று இருப்பதால்தான் அமைச்சர் அவர்கள் இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக் கிறார்கள் என்று நினைக்கிறேன். இது வரவேற்கத் தகுந்த மசோதா. லேபர் கமிஷனரிடத்தில் நூற்றுக்கணக்கான ஸ்டாண் டிங் ஆர்டர்கள் வரும்போது லேபர் கமிஷனர் ஸர்டிபை செய்யும் போது, அது மிகவும் கஷ்டமாக இருந்து வருவதால் இந்த வேலையைப் பிரித்துக் கொடுப்பது மிகவும் நல்ல அம்சம் என்று கருதுகிறேன்.

ஸ்டாண்டிங் ஆர்டர்ஸிலே நாம் கொடுத்திருக்கக்கூடிய விதியைப் பார்க்க வேண்டும். ஒரு தொழிற்சாலையிலே ஒரு தொழிலாளி இன்ன குற்றங்களைச் செய்தால் அவன் பேரிலே ஸ்டாண்டிங் ஆர்டர்ஸ் பிரகாரம் நடவடிக்கை எடுக்கலாம் என்று விதிகளை அமைத்திருக்கிறோம். விதியிலே திட்டவட்டமாக ஒன்றும் குறிப்பிடுவதற்கு முடியாத நிலை ஏற்பட்டிருக்கிறது. சாதாரணமாக இது யாருக்குப் பயன்படுகிறது என்றால், முதலாளி களுக்குத்தான் இது பயன்படுகின்றதே தவிர, தொழிலாளிகளுக்கு ஸ்டாண்டிங் ஆர்டர்களை வைத்து முதலாளிகள் பேரில் நடவடிக்கை எடுக்கும் நிலை ஏற்படவில்லை. ஸ்டாண்டிங் ஆர்டர்ஸை வைத்து முதலாளிகள் நடைமுறையில் என்ன செய்கிறார்கள் என்று பார்க்கும்போது, ஒரு தொழில் தகராறிலே முதலாளிக்கும் தொழிலாளிகளுக்கும் சமரசம் ஏற்படவில்லையென்றால், மத்தியஸ் தத்திற்கு விடவேண்டுமென்ற நியதி இருக்கிறது. முதலாளிகள் அம்மாதிரி செய்கிறார்களா என்று பார்க்கும்போது அந்த மாதிரி செய்வதில்லை. ஆனால் ஸ்டாண்டிங் ஆர்டர்படி அப்படி இருக்கிறது. இப்போது போனஸ் பிரச்னையை எடுத்துக் கொள்வோம். எந்த வருஷத்தை எடுத்தாலும் முதலாளிகள் மத்தியஸ்தத்திற்குப் போகத் தயாராயில்லை. அமைச்சர் அளவுக்கு வந்து, அமைச் சருடைய ஆதரவில்தான் இந்தப் பிரச்னை தீர்க்கப்படுகின்றது. நேற்றைக்கும்கூட தோட்டத் தொழிலாளர் போனஸ் பிரச்னை யில் முடிவு கண்டது அமைச்சர் மூலமே தவிர, முதலாளிகள் ஸ்டாண்டிங் ஆர்டர்படி மத்தியஸ்தத்திற்கு விடுவதற்கு, அதில் ஒரு உடன்பாட்டுக்கு வராமல் இருக்கிறார்கள் என்பது நன்றாகத்

[Sri J. Matha Gowder] [20th August 1960

தெரிந்திருக்கும். ஒரு தொழிற்சாலையில் ஒரு தொழில் தகராறில் நடவடிக்கை எடுக்கும்போது, ஓர்க்-ஸ்பாட்டிலே—அதாவது வேலை செய்யக்கூடிய இடத்தில்—வேலை நேரத்தில் தகராறு நடந்திருந்தால் நடவடிக்கை எடுக்கவேண்டும் என்பது தொழில் சட்டம். ஆனால் முதலாளிகள் என்ன செய்கிறார்கள் என்றால், வேலை நேரத்திற்கு அப்பாற்பட்டு, வேலை செய்யக்கூடிய இடத்திலல்லாமல் வேறு இடங்களில், தொழிலாளர்கள் குடியிருக்கக்கூடிய வீடுகளில் சண்டை நடந்தாலும் அதை வைத்து, ஸ்டாண்டிங் ஆர்டர்படி "மிஸ்பிகேவியர்" என்று நடவடிக்கை எடுக்கிறார்கள் . . .

MR. SPEAKER : கனம் சபாநாயகர் அவர்களே, அவர்கள் பேசும்போதே இதைப் பற்றி ஆட்சேபிக்கவேண்டுமென்று நினைத்தேன். இந்த மசோதாவானது லேபர் கமிஷனர் செய்யக்கூடிய வேலையைச் செய்வதற்கு அதிகப்படியான ஆபீஸர்களைப் போடுவது பற்றியது. ஸ்டாண்டிங் ஆர்டர் பற்றி இந்த மசோதாவிலே பேசுவது சரியல்ல. ஸ்டாண்டிங் ஆர்டர்களைத் திருத்துவதற்கு இந்த மசோதா கொண்டுவரப்படவில்லை. அதிகப்படியாக ஆபீஸர்களைப் போடுவதைப் பற்றி மட்டும் பேசவேண்டும்.

SRI P. S. CHINNADURAI : This is the only opportunity......

MR. SPEAKER : The hon. Member himself admitted in his speech that this was irrelevant............ கனம் அங்கத்தினர் அவர்களே இதை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். இந்த மசோதாவிற்குப் பொருத்தமில்லாவிட்டாலும் இதைப் பற்றி பின்னால் மசோதா கொண்டுவரவேண்டும் என்று பேசிவிட்டு கனம் அங்கத்தினர் பேச்சை முடித்தார். இதில் பேசுவதற்கு வேறு என்ன இருக்கிறது ?

I do not think the hon. Member Sri J. Matha Gowder can talk about it. The hon. Member may confine himself to the appointment of new officers.

SRI J. MATHA GOWDER : கனம் சபாநாயகர் அவர்களே, ஸ்டாண்டிங் ஆர்டர்களை ஸர்டிபை செய்ய அதிகாரிகளை நியமிக்கும்போது அந்த அதிகாரிகள் இந்த ஸ்டாண்டிங் ஆர்டரிலே உள்ள குறைபாடுகளை கவனிக்கவேண்டும் . . . .

MR. SPEAKER : இந்த மசோதாவிலே அதைப் பற்றி பேச முடியாது. ஸ்டாண்டிங் ஆர்டர்களை மாற்றுவது தனி சமாசாரம். அதைப் பற்றி தனி மசோதா வந்தால் அப்போது தான் பேசமுடியும்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : This is a golden opportunity to bring to the notice of the Hon. Minister the difficulties arising from the working of the Standing Orders. The Hon. Minister may take notice of them and amend the Act later on.

20th August 1960]

MR. SPEAKER : May I refer the hon. Member to the rules? When an hon. Member speaks on a Bill, he must speak on matters relevant to the Bill. Speaking about the merits of the Standing Orders is not relevant to the Bill under consideration and it is out of order. The hon. Member can talk on the merits of this Bill.

SRI J. MATHA GOWDER : கனம் சபாநாயகர் அவர்களே, இது போன்று நாம் உத்தியோகஸ்தர்களை அதிகமாக நியமிக்கும் போது அவர்கள் இம்மாதிரியான ஸ்டாண்டிங் ஆர்டரில் உள்ள குறைபாடுகளை கவனிக்கவேண்டும். லேபர் கமிஷனருக்கு வேலை இருக்கிறதென்று, அந்த ஒரு காரணத்திற்காக அதிகாரிகளை நியமிப்பதால் பிரயோசனம் ஏற்படாது. ஸ்டாண்டிங் ஆர்டர்ஸை ஸர்டிபை செய்வதற்காக மட்டும் இந்த மசோதா வந்தால், அதற்காக மட்டும் அதிகாரிகளை அதிகரித்தால் அவ்வளவு வரவேற்கத்தக்கதாக இருக்காது. ஆக, இதையும் பரிசீலனை செய்து லேபர் கமிஷனர் நியமிக்கக் கூடிய அதிகாரிகள் கவனிக்க வேண்டும் என்று சொல்ல வேண்டியிருக்கிறது. இந்த மன்றத்தில் லேபர் மான்யக் கோரிக்கை வந்தபோது ஸ்டாண்டிங் ஆர்டர் பற்றிப் பேசியிருக்கிறேன். இன்றைக்கு ஸ்டாண்டிங் ஆர்டர்களை ஸர்டிபை செய்ய ஆபிஸர்களை நியமிக்கிறோம் என்று ஒரு திருத்த மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறார்கள். அமைச்சர் அவர்கள் இப்போது சொல்லப்பட்ட விஷயங்களிலும் கவனம் செலுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். வொர்க்-ஸ்பாட்டிலே ஏதாவது நடந்தால் ஸ்டாண்டிங் ஆர்டர்படி நடவடிக்கை எடுக்கவேண்டுமே தவிர, அப்பாற்பட்டு ஏதாவது நடந்தால் சட்டப்படி நடவடிக்கை எடுக்க சட்டமே இல்லை என்று அழுத்தந்திருத்தமாகச் சொல்லுகின்றேன். இதைப் பற்றி ஸ்டாண்டிங் ஆர்டர்களை ஸர்டிபை செய்யக்கூடிய அதிகாரிகளுக்கு எடுத்துச் சொல்லவேண்டும். எல்லா அதிகாரிகளுக்கும் சொல்லி, இன்னின்ன காரியங்களுக்காக நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று அவர்களுக்கு ஒரு அறிக்கை கொடுக்க வேண்டுமென்று சொல்லிக்கொண்டு, இந்த மசோதாவை ஆதரித்து முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI N. MARUDACHALAM : கனம் சபாநாயகர் அவர்களே, 11-00 a.m. இந்த ஸ்டாண்டிங் ஆர்டர் சம்பந்தப்பட்ட வரையில் 100 பேர் வேலை செய்யும் இடத்தில் இது கட்டுப்படுத்தும் என்றும் மற்ற இடங்களில் இது கட்டுப்படுத்தாது என்றும் சொல்லப் பட்டிருக்கிறது. நூறு பேர் வேலை செய்யும் இடங்களில்கூட ஸ்டாண்டிங் ஆர்டரை பல முதலாளிகள் மீறுகிறார்கள். அவ்வாறு மீறுகிற முதலாளிகளை உடனடியாகக் கட்டுப்படுத்தும் வகையில் திட்டவட்டமான நிர்ப்பந்தம் இருக்கவேண்டும்.

MR. SPEAKER : மன்னிக்கவேண்டும். கனம் சின்னதுரை அவர்களும், மாதா கவுடர் அவர்களும் பேசும்போது இந்த ஸ்டாண்டிங் ஆர்டர் பற்றிப் பேசவேண்டாமென்றும் மசோதா பற்றிப் பேசவேண்டுமென்றும் சொன்னேன். ஸ்டாண்டிங் ஆர்டர் நல்லதா, கெட்டதா என்பது பற்றி இந்த நேரத்தில் பேசுவது

பொருத்தமில்லை. தயவுசெய்து இந்த மசோதா பற்றிப் பேசவும். இல்லாவிட்டால் பேசாதிருங்கள்; மந்திரியவர்களைக் கூப்பிடு கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் சின்னதுரையவர்கள் ஒரு சந்தேகத்தை எழுப்பினார்கள். இந்த அலுவலைப் பிரித்து வேறு உத்தியோகஸ்தர்களுக்குப் கொடுப்பதன் மூலமாக ஒரே விதி முறை அனுஷ்டிக்கப்படுமா அல்லது வேறு ஏதாவது அதில் மாறுதல்கள் அவரவர்கள் கருத்துப்படி ஏற்பட்டு விடுமா என்று சந்தேகத்தைத் தெரிவித்தார்கள். அந்த விதமான சந்தேகத் திற்கு இடம் இல்லை. காரணம் என்னவென்று சொன்னால், பொது வாக நாம் மாடல் ஸ்டாண்டிங் ஆர்டர் என்று செய்திருக்கிறோம். அதன் பிரகாரம் எல்லாருடைய ஸ்டாண்டிங் ஆர்டரையும் எடுத்துக் கொள்ளுகிறோம். இதைத் தவிர கமிஷனர் அவர்கள் இதற்கு முன்னால் ஏராளமான ஸ்டாண்டிங் ஆர்டர்களை "சர்டிபை" செய்திருக்கிறார். அதை எடுத்துக் காட்டினால் இப்போது புதி தாக நியமிக்கும் அதிகாரிகள் அவர்களுக்கு உட்பட்ட அதே முறையை அனுஷ்டிப்பார்கள். இதில் எந்த விதமான பயத் திற்கும் இடம் இல்லை. ஸ்டாண்டிங் ஆர்டரில் வேறு சில விஷயங்களைப் போடவேண்டுமென்று சொல்வது ஸ்டாண்டிங் ஆர்டருக்கு உகந்தது அல்ல. அதற்கெல்லாம் இண்டஸ்ட்ரியல் டிஸ்ப்யூட் ஆக்ட் பிரகாரம் நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம். "ரிடையரிங் பெனிபிட்ஸ்" போன்ற சலுகை களைப் பெற சமரசமாக முடிவு காணவிட்டால், இண்டஸ்ட்ரியல் டிஸ்ப்யூட் ஆக்ட் பிரகாரம் கோர்டிலே தீர்ப்பு பெற்றுக் கொள்ளலாம். ஸ்டாண்டிங் ஆர்டரை, குறைகளைப் போக்கிக் கொள்ளும் ஒரு சாதனமாகப் பயன்படுத்திக் கொள்ள முடியாது. மற்றப்படி, ஸ்டாண்டிங் ஆர்டர் பிரகாரம் நல்ல முறையில் நடத்தப்படவில்லையென்ற பல அபிப்பிராயங்கள் சொல்லப்பட்டன. அவ்வப்போது பட்ஜெட் டிபேட் சமயத்தில் எடுத்துச் சொல்லப்பட்டாலும், கடிதங்கள் மூலம் எழுதி அனுப்பினாலும் இதைப் பற்றிச் சர்க்கார் கவனிக்கும் என்று சொல்லிக் கொண்டு, இந்த மசோதாவைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன்.

MR. SPEAKER : The question is—

"That the Industrial Employment (Standing Orders) (Madras Amendment) Bill, 1960 (L.A. Bill No 14 of 1960), be taken into consideration."

The motion was put and carried, and the Bill was taken into consideration.

***Clause 2.***

MR. SPEAKER : The motion is—

"That Clause 2 do stand part of the Bill".

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move :—

In Clause 2, the brackets and words "(hereinafter referred to as the principal Act)" shall be omitted.

20th August 1960]

MR. SPEAKER: The question is—

In Clause 2, the brackets and words " (hereinafter referred to as the principal Act) " shall be omitted.

The amendment was put and carried.

Clause 2, as amended, was put and carried.

*Clause 3.*

MR. SPEAKER: The motion is—

" That Clause 3 do stand part of the Bill ".

THE HON. SRI R. VENKATARAMAN: I am not moving the Clause.

MR. SPEAKER: I do not think that the Hon. Minister is entitled to withdraw the clause at any stage.

THE HON. SRI R. VENKATARAMAN: When an Hon. Minister has not moved it, the usual procedure is to ask the House whether the Hon. Minister has the leave of the House to withdraw the clause.

MR. SPEAKER: I am afraid that the Clause has got to be voted down. Anyway I shall look into it. Today we shall vote it down. For future guidance I will look into the rules. Today we have got to vote it down.

SRI T. SAMPATH: Will it not lead to a ridiculous position?

THE HON. SRI R. VENKATARAMAN: I am not moving it at all. Therefore, the leave of the House has to be asked whether I have permission to withdraw it.

MR. SPEAKER: I have put the motion that Clause 3 do stand part of the Bill. At this stage, I am afraid the Hon. Minister cannot say that he is withdrawing it. If the Hon. Minister had not put the Clause in the Bill, then it would have been all right. I have already put the motion that Clause 3 do stand part of the Bill. Therefore, today we have got to vote it down. I will look into the rules for future guidance.

SRIMATHI T. N. ANANDANAYAKI: If we vote it down, it would lead to some other complication.

SRI K. VINAYAKAM: Can the Chair suggest as to what we should do, whether we should vote it down? Is it in order?

MR. SPEAKER: The Hon. Minister says that he is not moving the Clause. I have to point out to him the existing practice and the correct practice. The House will have to agree to what the Speaker says. I shall look into the matter. Today we will have to vote it down.

SRI T. SAMPATH : Will it not be a reflection?

MR. SPEAKER : No.

The question is—

"That Clause 3 do stand part of the Bill".

The Clause was put and lost.

MR. SPEAKER : I assure the Hon. Minister that I will look into the rules. Because even the other day I did not agree with the Hon. Finance Minister for the withdrawal of a Clause after the motion that the Clause do stand part of the Bill was moved. The clause had to be voted down. Anyway I will look into the rules later.

Clause 1 was put and carried.

MR. SPEAKER : The motion is—

"That the Preamble do stand part of the Bill".

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move—

In the preamble for the word "purposes", the word "purpose" shall be substituted.

MR. SPEAKER : The question is—

"In the preamble, for the word 'purposes', the word 'purpose' shall be substituted."

The amendment was put and carried.

The Preamble, as amended, was put and carried.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move—

"That the Industrial Employment (Standing Orders) (Madras Amendment) Bill, 1960 (L.A. Bill No. 14 of 1960), as amended, be passed."

MR. SPEAKER : The question is—

"That the Industrial Employment (Standing Orders) (Madras Amendment) Bill, 1960 (L.A. Bill No. 14 of 1960), as amended be passed."

The motion was put and carried, and the Bill as amended was passed.

(3) THE MADRAS PLACES OF PUBLIC RESORT (AMENDMENT) BILL, 1960 (L.A. BILL NO. 20 OF 1960).

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

"That the Madras Places of Public Resort (Amendment) Bill, 1960 (L.A. Bill No. 20 of 1960), be taken into consideration."

20th August 1960] [Sri M. A. Manickavelu]

கனம் சபாநாயகர் அவர்களே, இந்த விஷயத்தைப் பொறுத்த வரை, நம்முடைய மாநிலத்தோடு சேர்ந்திருக்கும் கன்னியாகுமரி ஜில்லாவுக்கும், செங்கோட்டை தாலுகாவுக்கும் "திருவாங்கூர்-கொச்சின் பப்ளிக் ரிசார்ட் ஆக்ட்" என்ற சட்டம் அமுலில் இருந்து வருகிறது. நம்முடைய சென்னை ராஜ்யத்தில் "மெட்ரூஸ் ப்ளேசஸ் ஆப் பப்ளிக் ரிசார்ட் ஆக்ட், 1888" என்ற சட்டம் அமுலில் இருக்கிறது. எல்லாவற்றுககும் ஒரே மாதிரியாக இருப்பதற்கு நம்முடைய சட்டமே அந்தப் பிராந்தியத்திற்கும் சட்டமாக இருக்க இந்த மசோதா இப்போது கொண்டு வரப்பட்டிருக்கிறது. அதோடு இந்தச் சமயத்தில் இரண்டொரு திருத்தங்களும் செய்யலாமென்று உத்தேசத்துடன் அந்தத் திருத்தங்களும் இந்த மசோதாவிலே அடங்கியிருக்கின்றன. அதாவது, இப்போது லைசென்ஸ் கோரும் விஷயத்திலே நம் சட்டப் பிரகாரம் முனிசிபல் கவுன்சில்களிலே சேர்மனுக்கு மனு கொடுக்க வேண்டுமென்று இருக்கிறது. அதனுடைய கருத்து என்னவென்ருல் அந்த நிர்வாக அதிகாரிக்கு என்று அர்த்தம். ஆகவே, இப்போது எக்சிக்யூட்டிவ் ஆபீசருக்கு மனு கொடுக்க வேண்டுமென்பது ஒரு திருத்தம். இரண்டாவது, முனிசிபல் பகுதி தவிர மற்றப் பிராந்தியத்தில் இப்போதிருக்கும் சப்-டிவிஷனல் மாஜிஸ்டிரேட்-க்கு மனு கொடுக்கவேண்டுமென்று இருக்கிறது. அதை இப்போது சப்-டிவிஷனல் மாஜிஸ்ட்ரேட், கலெக்டர், ஆர்.டி.ஓ. தாசில்தார், ஆசிரியர்களிடமும் மனு கொடுக்கலாம் என்பதுதான் திருத்தம். அவ்வளவுதான் இந்த மசோதாவினுடைய கருத்து.

SRI S. M. ANNAMALAI : கனம் சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இந்த மசோதா இப்பொழுது சட்ட மன்றத்தின் முன்னுல் வைக்கப்பட்டிருக்கிறது. இந்த மசோதாவின் நோக்கமென்ன, காரணம் என்ன என்று விளக்கத்தைப் பார்க்கும்போது, திருவிதாங்கூர்-கொச்சியிலிருந்து சென்னை ராஜ்யத்தோடு சேர்ந்திருக்கும் பகுதிக்கு இங்கிருக்கும் சட்டத்தை விஸ்தரிக்கப் போவதாகச் சொல்லப்படுகிறது. ஆனுல், மற்ற திருத்தங்களைப் பார்க்கும்போது, சேர்மனுக்குக் கொடுத்திருக்கும் அதிகாரத்தைக் கமிஷனருக்கு மாற்றுவது என்ன காரணத்திற்காக என்று சொல்லப்படவில்லை. மாஜிஸ்ட்ரேட்டுக்குக் கொடுத்திருக்கும் அதிகாரம் தாசில்தார், ரெவினியூ டிவிஷனல் ஆபீசர், கலெக்டர் இவர்களுக்கு மாற்றிக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அது வேண்டுமானுல் சரியாக இருக்கலாம். ஏனென்ருல், மாஜிஸ்ட்ரேட்டுக்கு அப்ளிகேஷன் கொடுத்து வாங்குவதென்ருல் கடினமாக இருக்கிறது; இப்பொழுது பஞ்சாயத்து யூனியன் சட்டம் அமுலுக்கு வந்துகொண்டிருக்கிறது; தாசில்தாருக்கு அதிகாரம் இருக்கிறது; அதைப் பொறுத்துத்தான் மாற்றுகிருேம் என்று சொல்லலாம். அந்தக் காரணங்கூட இந்த மசோதாவில் காணப்படவில்லை. "ஆப்ஜக்ட்ஸ் அண்டு ரீசன்ஸ்"-ல் ஒன்றுமே இல்லையே, அமைச்சர் பேசும்போதாவது அதை விளக்குவார் என்று எதிர்பார்த்தேன். சேர்மனுக்குக் கொடுத்திருக்கும் அதிகாரத்தைக் கமிஷனருக்கு மாற்றித் தருவதற்குக் காரணம் என்ன, இதுவரை சேர்மனுக்கு அந்த அதிகாரம் இருந்ததனுல் என்ன தகராறு ஏற்பட்டது, அந்தத் தகராறை தீர்ப்பதற்காக கமிஷனருக்கு அந்த அதிகாரத்தை

மாற்றுகிறோம் என்பதுபற்றி இந்தச் சட்ட மன்றத்தில் அமைச்சர் அவர்கள் விளக்குவார் என்று எதிர்பார்த்தேன். அவரும் அது பற்றி ஒன்றும் குறிப்பிடவில்லை.

திருவிதாங்கூர்-கொச்சி சட்டத்திலுள்ள லைசென்ஸ் கண்டிஷன்படி நடக்காவிட்டால் லைசன்ஸை ரத்துசெய்துவிடலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. வேண்டுமானால், அந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ளலாம்.

பத்தாவது ஷரத்தில் "Act not to apply to Church, temple, mosque, etc." என்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்த இடங்களைப் பொறுத்தவரையில் லைசென்ஸ் வாங்கத் தேவையில்லை என்று இந்தச் சர்க்கார் இதில் சொல்லியிருக்கிறார்கள். இதற்குக் காரணங்கள், விளக்கங்கள் காணப்படவில்லை. அமைச்சராவது அதை விளக்கமாகச் சொல்லியிருக்கலாம். கோயில், மாதா கோயில், மசூதி போன்ற பொது இடங்களைப் பொறுத்தவரையில், அதற்கு ஏதாவது லைசென்ஸ் கட்டணம் இருந்தால்கூட, சிறிய தொகையாகத்தான் இருக்கலாம். அப்படி வாங்ுவது, அந்த இடங்களைச் சுகாதார சூழ்நிலையில் முனிசிபாலிடிகள் வைத்திருக்க ஏதுவாக இருக்கும். ஆகவே, கோயில்கள், மாதாகோயில்கள், மசூதிகள் இவைகளிடமிருந்து லைசென்ஸ் கட்டணம் வாங்குவது மிகவும் நன்ருக இருக்கும். அவைகளுக்கு விதி விலக்கு கொடுத்திருப்பதற்குக் காரணம் என்ன, சேர்மனுக்கு இருக்கும் அதிகாரத்தை கமிஷனருக்கு மாற்றிக் கொடுப்பதற்குக் காரணம் என்ன என்ற விளக்கத்தை அமைச்சர் அவர்கள் சொல்ல வேண்டும். எல்லா மக்களும் விரும்புவது, இந்த அதிகாரங்கள் எல்லாம் சேர்மனிடத்தில் இருக்கவேண்டும் என்பது. கமிஷனருக்கு அதிகாரங்கள் அதிகமாக இருக்கின்றன, அந்த அதிகாரங்களை முனிசிபாலிடிக்கு மாற்றவேண்டுமென்று அவர்கள் சொல்கிருர்கள். கமிஷனருக்கும் முனிசிபாலிடிக்கும் ஒருவித ஒற்றுமையும் இல்லாமலிருக்கிறது. கமிஷனருக்கு அதிகாரம் அதிகமாக இருப்பதால், எங்களுக்கும் அவர்களுக்கும் ஒற்றுமை கிடையாது என்று முனிசிபல் அங்கத்தினர்கள் சொல்லிக்கொண்டிருக்கிருர்கள். முதல் வகுப்பு பஞ்சாயத்து போர்டில் எக்ஸிக்யூடிவ் அதிகாரிக்கு அதிகாரம் அதிகமாக இருக்கிறதே தவிர, அங்குள்ள ஊராட்சிமன்றத் தலைவருக்கு அதிகாரம் இல்லை. இருக்கும் ஒருசில அதிகாரங்களையும் கமிஷனரிடத்தில் கொடுப்பது என்ருல், நாளடைவில் சேர்மனுக்கு இருக்கும் எல்லா அதிகாரங்களும் கொஞ்சங் கொஞ்சமாக பிடுங்கப்பட்டு கமிஷனரிடம் கொடுக்கப் பட்டுவிடுமோ என்று நினைக்கிருர்கள். இப்படியாக எக்ஸிக்யூடிவ் ஆபீசரிடமும், தாசில்தாரிடமும் கொடுத்துவிடலாம் என்ற நம்பிக்கையோடு இப்படிப்பட்ட திருத்தங்களைக் கொண்டுவருகிருர்களோ என்பது புரியவில்லை. இதைப்பற்றி அமைச்சர் அவர்கள் விளக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகின்றேன். நம் ராஜ்யத்தோடு இணைந்த பகுதிகளுக்கு இந்தச் சட்டம் விஸ்தரிக்கப்பட வேண்டும் என்பதை நான் வரவேற்கிறேன். ஆனல், மற்ற திருத்தம் செய்திருக்கிருர்களே, அதற்கு உண்டான முக்கியமான காரணங்களை விளக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

20th August 1960]

SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் தலைவர் அவர்களே, இந்தச் சட்டத்திற்குத் திருத்த மசோதா கொண்டு வந்திருப்பது வரவேற்கத்தக்கது. கமிஷனருக்கு அதிகாரம் அதிகமாக இருக்கிறது, சேர்மனுக்கு அதிகாரம் குறைந்துவிட்டது என்ற எண்ணத்தில் எனக்கு முன் பேசிய கனம் அங்கத்தினர் குறிப்பிட்டார். ஓரளவுக்கு நல்ல சேர்மனாக இருந்தால் அதிகாரம் அவர்களுக்குக் கொடுக்கப்படுவதிலே தவறு இல்லை. ஆனால், சில முனிசிபாலிடியில் சேர்மனாக இருப்பவருக்கு 'பாலிடிக்ஸ்' தான் அதிகமாக இருக்கிறதே தவிர, வேறு எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. அவர்களுக்கு இந்த லைசென்ஸ் கொடுக்கும் அதிகாரம் கொடுக்கப்படுமானால், அது பொது மக்களுக்கு எவ்வளவு பாதகமாக இருக்கும் என்று சொல்லத் தேவையில்லை. 'இம்பார்ஷியல்' ஆக நடந்துகொள்வதற்கு அதிகாரியிடத்தில் அந்தப் பொறுப்பைக் கொடுப்பதினால் பரவாயில்லை என்ற காரணத்தால் அப்படிக் கொடுத்திருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். அதுவும் அல்லாமல், சேர்மனுக்கு இதைக்காட்டிலும் முக்கியமான வேலை இருக்கும்போது லைசென்ஸ் கொடுக்கும் தொந்தரவையும் அவர்களிடத்தில் கட்டுவானேன் என்ற நல்ல எண்ணத்திலே திருத்தம் கொண்டுவந்திருக்கலாம். இதனால் சேர்மனுக்கு அதிகாரம் குறைந்துவிட்டது என்று நினைப்பது தவறு. லைசென்ஸ் வழங்குவதென்றால் தொல்லை அதிகமாக இருக்கும். அந்த நேரத்தில் சேர்மன் இன்னும் நல்ல காரியங்களைச் செய்யலாமே என்ற நல்ல எண்ணத்தில் அந்த அதிகாரம் அவரிடத்திலிருந்து எடுக்கப்பட்டு கமிஷனருக்கு கொடுக்கப்பட்டிருக்கலாம்.

கோயில்கள், மசூதிகள், மாதா கோயில்கள் இவைகளுக்கு விதி விலக்குக் கொடுத்ததை நான் மனமார வரவேற்கிறேன். இவைகளுக்கெல்லாம் ஏன் விதிவிலக்கு கொடுக்கவேண்டுமென்று எனக்கு முன் பேசிய கனம் அங்கத்தினர் கேட்டார்கள். இத்தகைய ஸ்தாபனங்கள் நல்ல எண்ணங்களை மக்களிடையே வளர்ப்பதற்காக மதாசாரப்படி மக்களுக்கு நல்லது செய்யத் துணையாக இருப்பதற்காக நடத்தப்படுகின்றன. 'மெடீரியலிஸ்டிக் வ்யூ' இருப்பவர்கள் வேண்டுமானால் இவைகளுக்கு விதிவிலக்கு அளிப்பதை எதிர்க்கலாம். ஆனால், இவைகளுக்கு விதிவிலக்கு அளிப்பதால், தனிப்பட்டவர் யாருக்கும் லாபம் போய்விடவில்லை. நல்ல எண்ணத்தோடு கோயில், மசூதி, மாதா கோயில் இவைகளுக்கு விதிவிலக்குக் கொடுத்தது வரவேற்கத்தக்கது. அதன் மூலமாக மக்கள் மத்தியிலே நல்ல எண்ணம் பரப்பப்படும் என்று நான் எண்ணுகின்றேன். 'ஏன் விதிவிலக்கு கொடுக்கவேண்டும்?' என்று கேட்பதைவிட, கொடுத்தார்களே என்பதற்காக வரவேற்கவேண்டும். அந்த ஸ்தாபனங்களுக்கு விதிவிலக்குக் கொடுத்திருப்பதைக் குறித்து, மக்கள் வரவேற்பார்கள்; மக்களின் நன்மைக்காக அந்த ஸ்தாபனங்கள் பாடுபட முன்வரும். ஆகையால், திருத்த மசோதாவை எதிர்க்கவேண்டிய அவசியம் இல்லை, மனமார வரவேற்பதுதான் சரி என்று நான் நினைக்கிறேன்.

SRI K. SATTANATHA KARAYALAR : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தச் சட்டத்தில் நடைமுறையில் மிகவும் தலைவேதனை தரக்கூடிய பகுதி சினிமா கொட்டகைகளுக்கு லைசென்ஸ்

கொடுப்பதிலேதான் இருக்கும். அதிலே ஏற்கனவே இருக்கும் கட்சிப் பூசல்கள் ஓரளவு பிரதிபலிக்கக்கூடும். லைசென்ஸிற்கு அபேட்சித்தால் காலவரையறையின்றி லைசென்ஸ் கொடுக்காமலே இருப்பதற்கும் முடியும். அப்படி, குறிப்பிட்ட ஒரு காலத்திற் குள்ளாக, முப்பது தினங்களுக்குள்ளாக பதில் கொடுக்கவில்லை யென்றால், "Licence is deemed to have been granted" என்ற ப்ரொவிஷன் இருக்குமென்று எண்ணுகிறேன். அந்த அடிப்படையில் எக்ஸிக்யூடிவ் அதாரிடிக்குக் கொடுப்பதா அல்லது தலைவருக்குக் கொடுப்பதா என்பதைப்பற்றியெல்லாம், கவுன்சில் முன்பு வைத்து சில குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் இதில் வாதப் பிரதிவாதங்கள் செய்யவேண்டிவரும். 'பப்ளிக் ரிஸார்ட்' என்றால், பார்க் அதில் வருகிறது. ஆனால், கோயில், மாதா கோயில், மசூதி அதில் வர நியாயம் இல்லை. சினிமாவுக்கு லைசென்ஸ் கொடுப்பது அதில் வராது—எனது வட்டாரத்தில் அமுலில் இருந்த அனுபவத்தை வைத்துச் சொல்கிறேன்—டூரிங் சினிமாவுக்கு லைசென்ஸ் கொடுப்ப திலேதான் மிக வாத பிரதிவாதங்கள், கட்சிப் பாகுபாடுகள் வரும். கவுன்சிலுக்கே இந்த அதிகாரத்தைக் கொடுத்து கவுன் சிலில் வைத்து குறிப்பிட்ட தினத்திற்குள்ளாக முடிவு செய்ய வேண்டுமென்று வரையறை இருக்கவேண்டும். அது தவறினால், யார் அபேட்சிக்கிறாரோ அவருக்கு லைசென்ஸ் கொடுக்கப்பட்டு விட்டதாக அதிலே ஷரத்து இருக்கவேண்டும். அந்த அடிப் படையில்தான் இதற்கு முக்கியத்துவம் உண்டு. அதிலேதான் பல சிக்கல்கள் வர இடம் ஏற்படும். அதைத் தவிர்ப்பதற்குள்ள ஒரு கண்ணோட்டத்தோடு இந்த மசோதாவை நான் வரவேற் கிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவின் கருத்து, நம் ராஜ்யத்தில் புதிதாகச் சேர்ந்திருக்கும் பிராந்தியத்திலும் நம் மாகாணத்திலே இருக்கும் பழைய 1888-ம் ஆண்டு சட்டம் அமுலில் இருக்கவேண்டும் என்பது தான். இதற்காகத்தான் இப்பொழுது திருத்தம் கொண்டு வந்திருக்கிறோம்.

இதிலே பல ஷரத்துக்கள் இருக்கின்றன. அவற்றிற்கெல்லாம் நான் போகவில்லை. அவையெல்லாம் அப்படியே இருக்கின்றன. நாம் செய்வது இரண்டு பிராந்தியத்திற்கும் ஒரே சட்டம் இருக்க வேண்டும் என்பதுதான். கோயில்கள், முதலியவைகளுக்கெல்லாம் விலக்கு ஏன் கொடுக்கவேண்டும் என்று ஒரு கனம் அங்கத்தினர் கேட்டார். அந்த விஷயம் எல்லாம் இப்பொழுது வராது. கனம் அங்கத்தினர் அதைப்பற்றி இங்கே பேசுவது அவ்வளவு பொருத்தம் இல்லை. என்னுடைய முக்கியமான நோக்கம் புதிதாகச் சேர்ந்த பகுதிக்கும் இதை 'எக்ஸ்டெண்டு' பண்ண வேண்டும் என்பதுதான்.

ஆயிரத்து எண்ணூற்றி எண்பத்தெட்டாவது ஆண்டு சட்டத் தில், அப்ளிகேஷன் சேர்மனுக்குப் போடவேண்டுமென்று இருக் கிறது என்றால், அப்பொழுது சேர்மன்தான் உண்டு; எக்ஸிக்யூடிவ் ஆபீசர் அப்பொழுது இல்லை. இப்போது நிர்வாகம் கமிஷனரிடம்

20th August 1960] [Sri M. A. Manickavelu]

இருக்கிறது. சேர்மனிடத்தில் அதிகம் இல்லை. அதற்குப் பொருத்தமாக சட்டத்தை மாற்றவேண்டியதாக இருக்கிறது. அவ்வளவுதான்; வேறு ஒன்றும் பிரமாதமாகச் செய்யவில்லை.

அதேபோல், முனிசிபாலிடி இல்லாத பிராந்தியத்திலே 'ஒரு அதிகாரி' என்று இருக்கிறது. அந்த அதிகாரி யார் என்று விளக்கமாக தெரிவதற்கு 'கலெக்டர், ரெவினியூ டிவிஷனல் ஆபீசர், தாசில்தார்', என்று திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது. விபரீதமாக ஒன்றும் இல்லை. கனம் அங்கத்தினர் இதிலே யோசனை பண்ணி, இல்லாத சிக்கல்களை அவராக உண்டுபண்ணிக்கொள் கிறாரேயன்றி, மசோதா ரொம்ப சாதாரணமாக இருக்கிறது என்று சொல்ல விரும்புகிறேன். ஆகையால், இதற்கு ஒன்றும் ஆட்சேபணை வேண்டியதில்லை.

MR. SPEAKER : The question is—

"That the Madras Places of Public Resort (Amendment) Bill, 1960 (L.A. Bill No. 20 of 1960), be taken into consideration."

The motion was put and carried, and the Bill was taken into consideration.

Clauses 2 and 3 were put and carried.

*Clause* 4.

MR. SPEAKER : The motion is—

'That Clause 4 do stand part of the Bill.'

SRI S. M. ANNAMALAI : Sir, I move the following amendments :—

"*Omit* sub-clause (i),"

"In sub-clause (ii), before the words 'to any Revenue Officer' *insert* the words, figures, brackets and letter 'to the Panchayat Board President of a town Panchayat under the Madras Panchayats Act, 1958 (Madras Act XXXV of 1958), and in every other case'."

SRI V. SUBBIAH : Sir, I second the amendments.

MR. SPEAKER : Now the clause and the amendments are before the House for discussion.

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் ஸ்ரீ. எஸ். எம். அண்ணாமலை அவர்கள் பேசலாம்.

SRI S. M. ANNAMALAI : ஸார், நான் முன்பே சொல்லி விட்டேன். கனம் அமைச்சர் அவர்கள் சொல்லிய பதில் அவ்வளவு சரியாக இல்லை. சேர்மனுக்குக் கொடுத்திருக்கக்கூடிய அதி காரத்தை கமிஷனருக்குக் கொடுப்பதாகச் சொல்கிறார். ஆயிரத்து எண்ணூற்றி எண்பத்தெட்டாம் வருடத்திய சட்டப்படி சேர்மன் மட்டும்தான் இருந்தார். அதற்குப் பிறகு கமிஷனர் நியமிக்கப

பட்டிருக்கிறார். இப்பொழுதே கமிஷனருக்கு அதிகப்படியான அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது என்று சாதாரணமாக மக்களால் கருதப்படுகிறது. அப்படிப்பட்ட நிலைமையில் இன்னும் அதிகப்படியான அதிகாரத்தை கமிஷனருக்குக் கொடுக்க வேண்டிய அவசியமில்லை என்று கருதுகிறேன். ஆகையால்தான் இந்த திருத்தத்தை நான் கொடுத்திருக்கிறேன்.

அதற்கு அடுத்தபடியாக 'பர்ஸ்ட் க்ளாஸ்' பஞ்சாயத்துகளை ஒட்டி சினிமா போன்றவைகளுக்கு அவைதான் லைசென்சு கொடுத்து வருகின்றன. பஞ்சாயத்து பிரசிடெண்ட் தான் கொடுக்கிறார். அப்படி இல்லாமல் அந்தந்த இடங்களிலுள்ள தாசில்தார் கொடுப்பது என்று இருந்தால் அவ்வளவு நலமாக இல்லை. அந்தந்த ஊர்களிலுள்ள நன்மை தீமைகள் அந்தந்த ஊர் பஞ்சாயத்து பிரசிடெண்ட்களுக்குத்தான் நன்றாகத் தெரியும். தாசில்தாருக்கு அவ்வளவாகத் தெரியாது. பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் இருக்கக்கூடிய இடங்களில் வேண்டுமானால் தாசில்தார் களுக்குக் கொடுக்கலாம். முதல் க்ளாஸ் பஞ்சாயத்துக்களாக இருந்தால் தாசில்தார்களுக்குக் கொடுப்பது என்பது அவ்வளவு சரியாக இல்லை. அங்கேயெல்லாம் சேர்மனுக்குக் கொடுக்கலாம். அந்த முறையில் என்னுடைய திருத்தம் இருக்கிறது. ஆகவே என்னுடைய திருத்தங்களை நான் வலியுறுத்துகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU: கனம் சபாநாயகர் அவர்களே, நான் முன்பே சொன்னேன். சேர்மன் என்று சொன்னால் அதில் எக்சிக்யூடிவ் அதாரிட்டி என்று பொருள் படுகிறது. அப்படி எக்சிக்யூடிவ் அதாரிட்டி என்றால் அது கமிஷனர்தான். அதுதான் இப்பொழுதும் நடந்து கொண்டிருக் கிறது. இப்பொழுது அது சேர்மனுக்கு அப்ளிகேஷன் கிடையாது. அதை விளக்கமாகச் சொல்ல வேண்டும் என்பதற்காகத்தான் இந்தத் திருத்தம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. புதியது அல்ல. விளக்கமாக இருக்க வேண்டும் என்பதற்காக இந்த சந்தர்ப்பத்தை பயன்படுத்திக்கொண்டு இந்தத் திருத்தம் கொண்டு வரப் பட்டிருக்கிறது. புதிதாக ஒன்றும் செய்யவில்லை. இருக்கிற நிலைமை அப்படியேதான் இருக்கிறது.

The amendments were put and lost.

Clause 4 was put and carried.

Clauses 5, 6, 7, 8 and 9 were put and carried.

*Clause* 10.

MR. SPEAKER: The motion is—

'That clause 10 do stand part of the Bill.'

SRI S. M. ANNAMALAI: லார், சர்ச், கோவில், மசூதி இவை களைப் பற்றி பேச வேண்டியதில்லை என்று கனம் அமைச்சர் குறிப்பிட்டார். அதைப்பற்றி க்ளாஸ் 10-ல் குறிப்பிடப்பட்டிருப் பதால் அவைகளைப்பற்றி குறிப்பிட்டு பேசினேன்.

20th August 1960] [Sri S. M. Annamalai]

புதிய 13-டி பிரிவில்—

" Nothing in this Act shall apply to any church, temple, mosque or other place of public worship. " என்று இருக்கிறது. இந்த இடங்களுக்கு லைசென்சு வாங்கவேண்டியதில்லை என்று இந்த பத்தாவது கிளாஸில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த கிளாசை அப்படியே நீக்க வேண்டும் என்று நான் சொல்லு கிறேன். அங்கெல்லாம் சுகாதார வசதி ஏற்படுத்துவதற்காக அப்படி லைசென்ஸ் வாங்க வேண்டும் என்று இருக்கிறது. மற்ற இடங்களில் வாங்காமல் போனுல் பரவாயில்லை. ஆகையால் இந்த இடங்களைக் குறிப்பிட்டிருப்பது அவ்வளவு பொருத்தமாக இல்லை. ஆகவே இந்த மசோதாவிலுள்ள இந்த பத்தாவது க்ளாசை நான் பலமாக எதிர்க்கிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : லைசென்சு வாங்குவ தெல்லாம் கண்காட்சி காட்டுவது, சினிமா நடத்துவது இவற்றிற் கெல்லாம்தான். இம்மாதிரி மசூதி, கோவில், மாதா கோவில் இங்கேயெல்லாம் அவற்றிற்கு அவசியம் ஏற்படாது என்பதற் காகத்தான் இப்படி செய்யப்பட்டிருக்கிறது. மேலும் அவைகள் எல்லாம் மத விஷயமாக இருப்பதால் அங்கேயெல்லாம் அது வேண்டியது இல்லை. அதற்காகத்தான் இந்த திருத்தம் கொண்டு வரப்பட்டிருக்கிறது.

MR. SPEAKER : The question is—

' That Clause 10 do stand part of the Bill '.

Clause 10 was put and lost by voice vote.

MR. SPEAKER : Clause 11 . . .

I suppose hon. Members are aware that the Government have lost Clause 10, an important provision in the Bill. I am guided only by the voice for or against that I hear.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I am afraid there has been some confusion in the minds of hon. Members. So I request the Hon. Speaker to reopen Clause 10 of the Bill.

MR. SPEAKER : Let the Hon. Minister move a motion to that effect.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

" That the decision taken by the House on Clause 10 be revoked."

The motion was put and carried.

MR. SPEAKER : The question is—

' That Clause 10 do stand part of the Bill '.

Clause 10 was put and carried.

Clauses 11 and 12 were put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

MR. SPEAKER : I want to remind hon. Members that every one in this House has a duty to perform and that is to express what he feels about the Bill. If hon. Members keep quiet and the Chair goes by what he hears, he cannot be blamed even if the vote goes against the ruling Party. It is the duty of the hon. Members to indicate their preference at the time of voting by raising their voices sufficiently vociferously. I give this warning to hon. Members.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

"That the Madras Places of Public Resort (Amendment) Bill, 1960 (L.A. Bill No. 20 of 1960), be passed."

MR. SPEAKER : The question is—

11-30 a.m. "That the Madras Places of Public Resort (Amendment) Bill, 1960 (L.A. Bill No. 20 of 1960), be passed."

The motion was put and carried, and the Bill was passed.

(4) THE MADRAS PAWN-BROKERS (AMENDMENT) BILL, 1960.

THE HON. SRI M. A. MANICKAVELU : Mr. Speaker, Sir, I move—

"That the Madras Pawn-brokers (Amendment) Bill, 1960, be taken into consideration."

The Madras Pawn-brokers Act, 1943 (Madras Act XXIII of 1943) was passed in 1943 in order to control and regulate the business of pawn-broking. Subsequently, it was felt that comprehensive legislation was necessary to regulate and control the entire business of money-lending and not merely the business of pawn-brokers. Hence, the Government prepared the Madras Money-lenders Bill, 1955 which included provisions regarding pawn-brokers also. But the Joint Select Committee, which considered the Madras Money-lenders Bill, was in favour of excluding the pawn-brokers from the purview of that Bill. It has, therefore, become necessary to incorporate, in the Madras Pawn-brokers Act, 1943, such of those provisions in the Money-lenders Bill, 1955 as related to pawn-brokers.

2. Opportunity has also been taken to provide, in the Madras Pawn-brokers (Amendment) Bill, *inter alia*, for the cancellation of licence of a pawn-broker in appropriate cases, a right of appeal against the refusal to grant or the cancellation of a licence and to make the pawn-broker answerable for the transactions pending upto the date of cancellation of the licence. Provision has also been made in the Bill regarding the maintenance of registers, etc. by the auctioners, and for requiring the pawn-broker to generally keep the pawned articles in the licensed place of business to facilitate their inspection by the pawner. Provisions of enhanced rates of interest in respect of loans on pledge and for requiring the pawn-broker to specify certain particulars as may be prescribed in the pledge book have also been made. With these few words, I commend the motion for the acceptance of this Honourable House.

20th August 1960]

MR. SPEAKER : Motion moved—

" That the Madras Pawn-brokers (Amendment) Bill, 1960, be taken into consideration."

SRI T. SAMPATH : Sir, I move—

" That the concurrence of the Legislative Council be obtained for setting up a Joint Select Committee of both the Houses consisting of——Members (Members of the Legislative Assembly and——Members of the Legislative Council) to consider the Madras Pawn-brokers (Amendment) Bill, 1960 and that the following Members of the Legislative Assembly be selected to serve on such a Joint Select Committee." (The list of names to be furnished later.)

SRIMATHI T. N. ANANDANAYAKI : I second the amendment, Sir.

SRI T. SAMPATH : I have given notice of an amendment, on second thoughts, to my original amendment to the effect that the Madras Pawn-brokers (Amendment) Bill, 1960 may be referred to a Select Committee. With the permission of Hon. Speaker, I may be permitted to move that.

This is an important enactment. It was enacted in 1943. Certain important changes are sought to be made in this amending Bill. It is better that the Bill is fully examined by a Select Committee.

THE HON. SRI M. A. MANICKAVELU : I am agreeable for reference of this Bill to a Select Committee.

MR. SPEAKER : I want to say onething. The amendment which the hon. Member Sri T. Sampath has given notice of says that the concurrence of the other House, Legislative Council, be obtained for setting up a Joint Select Committee of both Houses to consider this Bill.

SRI T. SAMPATH : I have modified that amendment, Sir.

MR. SPEAKER : The hon. Member must give the Speaker a copy of the modified amendment. How am I to know what the hon. Member has got in his mind?

SRI T. SAMPATH : I have suggested a modification to my amendment.

MR. SPEAKER : Hon. Members do not seem to be aware of the Rules. Rules are clear. Hon. Members should give their amendments in time. The amendment of Sri T. Sampath which I am having before me now says that the concurrence of the Legislative Council be obtained for setting up a Joint Select Committee of both Houses to consider this Bill. It is not so easy. Government can move an amendment now. I will allow it.

SRI T. SAMPATH : An hon. Member of this House has got a right, I think to modify his amendment.

[20th August 1960

MR. SPEAKER : But the hon. Member must give separate notice for that. I have not received any modified amendment from the hon. Member.

THE HON. SRI M. A. MANICKAVELU : I understand that the hon. Member gave notice of a modified amendment to his original amendment. Evidently it has not reached the Hon. Speaker in time.

Under the circumstances I move the following amendment :—

"That the Madras Pawn-brokers (Amendment) Bill, 1960, be referred to a Select Committee consisting of the following members :—

1. Hon. Sri M. A. Manickavelu
2. Sri P. G. Karuthiruman
3. Sri T. Sampath
4. Sri K. S. G. Haja Sheriff
5. Sri S. Khadir Sheriff
6. Sri A. Rathnavel Gounder
7. Sri A. Chinnasami
8. Sri S. Ramakrishna Thevar
9. Srimathi P. K. R. Lakshmikantham
10. Sri N. K. Palanisami
11. Sri D. S. Authimoolam
12. Sri P. S. Chinnadurai
13. Sri S. Ramasami Thevar
14. Sri V. Subbiah
15. Sri K. Anbazhagan"

MR. SPEAKER : Motion moved—

"That the Madras Pawn-brokers (Amendment) Bill, 1960, be referred to a Select Committee consisting of the following members :—

1. Hon. Sri M. A. Manickavelu
2. Sri P. G. Karuthiruman
3. Sri T. Sampath
4. Sri K. S. G. Haja Sheriff
5. Sri S. Khadir Sheriff
6. Sri A. Rathnavel Gounder
7. Sri A. Chinnasami
8. Sri S. Ramakrishna Thevar
9. Srimathi P. K. R. Lakshmikantham
10. Sri N. K. Palanisami
11. Sri D. S. Authimoolam
12. Sri P. S. Chinnadurai
13. Sri S. Ramasami Thevar
14. Sri V. Subbiah
15. Sri K. Anbazhagan"

20th August 1960]

SRI K. VINAYAKAM: The original amendment has been moved by the hon. Member Sri T. Sampath. First it has got to be put to vote and then only the second amendment on the same subject can be moved.

MR. SPEAKER: I will do it at the time of voting.

SRI K. VINAYAKAM: Can two amendments be moved on the same subject?

MR. SPEAKER: Yes, the hon. Member can move an amendment, if he likes (laughter).

SRI K. SATTANATHA KARAYALAR: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவை ஒரு பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்புவதை வரவேற்கிறேன். இது ஒரு முக்கியமான மசோதா. ஏற்கனவே கடன் வாங்கியவர்களுடைய நிலைமையைப் பற்றி—அதை ஒழுங்குபடுத்துவதற்காக ஏற்படுத்திய சட்டத்தில் விவா திக்கப்பட்டிருக்கிறது. அடகு பிடிப்பவர்கள் பலதரப்பட்டவர்களாக இருக்கிறார்கள். இந்த மசோதா பொறுக்குக் கமிட்டிக்குப் போகும்போது நான் சொல்ல விரும்புவது ஒன்றே ஒன்றுதான். அடகு பிடிப்பவர்கள் பலதரப்பட்டவர்களாக இருக்கிறார்கள். சிறு மூலதனத்தை வைத்துக்கொண்டு உயர்ந்த வட்டிக்குப் பவுன் நகைகளை அடகு பிடிக்கிறவர்கள் இருக்கிறார்கள். ஒரு பவுனுக்கு 60 ரூபாய், 70 ரூபாய் வரையில் கொடுப்பவர்கள்கூட இருக்கிறார்கள். இவர்கள் இப்படி அடகு பிடித்த நகைகளை இன்னொரு பாங்கிலோ பண்டிலோ அடகு வைத்துப் பணம் வாங்குகிறார்கள். இப்படி அடகு பிடித்த நகைகளையே திரும்பவும் அடகு வைப்பதைத் தடுக்கவேண்டுமென்று நான் விரும்புகிறேன். இந்த மசோதாவில் உள்ள எட்டாவது ஷரத்து எந்த அளவுக்கு இதைத் தடுக்கும் என்பது புரியவில்லை. இப்படி அடகு பிடித்த நகைகளைத் திரும்பவும் அடகு வைத்ததன் காரணமாக இன்றைக்கு "பாலை பாங்கு" கலைக்கப்பட்டு, அதனுடைய சொத்துக்களைப் பிரித்துவிட வேண்டிய நிலைமை எழுந்தபோது இதனால் பல சிக்கல்கள் ஏற்பட்டிருக்கின்றன. அவர்களிடம் அடகு பிடித்திருக்கும் நகைகளை இன்றையதினம் கூட்டுறவு பாங்குகள் கூடத் திருப்பிக் கொடுக்க முடியாத நிலைமையில் இருக்கிறார்கள். இதனால் தங்கள் பொருளை முன்பு அடகு வைத்தவர்கள் மீட்டுக் கொள்ள முடியாத நிலைமை ஏற்பட்டிருக்கிறது. ஆகவே இனி அடகு பிடிப்பவர்கள் நல்ல மூலதனம் வைத்து இதைச் செய்ய வேண்டும். அடகு பிடிக்கிற பொருள்கள் அவர்கள் கையில் இருக்க வேண்டும். இரண்டாவது தடவையாக அடகு பிடித்தவர்கள் அந்த நகைகளை இன்னொரு வரிடத்தில் அடகு வைக்க வசதி இருக்கக் கூடாது. இதில் இன்ஸ்பெக்ஷனுக்குப் போகும்போது அந்த நகைகள் காட்டப்பட வேண்டும் என்று இருக்கிறது. இரண்டு நாள் நோட்டீஸ் கொடுப்பதனால் அவர்கள் அந்த நகைகளை மீட்டுக் கொண்டு வந்து வைத்திருந்து காட்ட முடியும். திரும்பவும் கொண்டுபோய் அடகு வைத்துவிடமுடியும். அதற்கு வசதி இல்லாதவாறு இந்த

[Sri K. Sattanatha Karayalar] [20th August 1960

மசோதா பொறுக்குக் கமிட்டியில் திருத்தப்பட வேண்டுமென்று தெரிவித்துக்கொள்கிறேன். கன்னியாகுமரி மாவட்டத்தில் மாத்திரம் இன்றையதினம் பாலே பாங்கின் காரணமாக அடகு எடுத்த நகைகளைத் திரும்ப அடகு வைத்திருப்பதன் காரணமாகப் பல சங்கடங்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் சுட்டிகாட்ட விரும்புகிறேன். ஆகவே "Pawn Brokers shall not repledge" என்று இருக்கவேண்டும். அவர்கள் திரும்பவும் அடகு வைக்கக்கூடாது என்ற வழிவகைகளை பொறுக்குக் கமிட்டியில் பரிசிலனை செய்ய வேண்டுமென்று நான் கோருகிறேன்.

SRIMATHI T. N. ANANDANAYAKI: கனம் சபாநாயகர் அவர்களே, அடகு வைப்பவர்களுடைய — பிடிப்புவர்களுடைய நிலைமையை ஒழுங்குபடுத்துவதற்காகக் கொண்டுவரப்பட்ட இந்த மசோதாவை தீர ஆலோசித்து தக்க திருத்தங்களுடன் கொண்டு வருவதற்காகப் பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பியிருப்பதை வரவேற்கக் கடமைப்பட்டிருக்கிறேன். நடைமுறையில் இதில் எவ்வளவோ சிக்கல்கள் எழுகின்றன. அடகு பிடிப்பவர்கள் ரெக்கார்டு பூர்வமாகக் குறிப்பிடப்படுகிற வட்டியைக் காட்டிலும் அதிகமாக வாங்கிக் கொள்ளலாம். உள்ள வட்டிக்கு இன்றைய தினம் பணம் கொடுப்பவர்கள் மிகக் குறைவு. மறைமுகமாக வாங்கக் கூடிய வட்டிதான் அதிகமாக இருக்கிறது. இன்னும் இந்த மசோதாவின்படி அதிகரித்துக் கொடுப்பதானது—இந்தத் தீமை இன்னும் அதிகரித்துவிடுமோ என்று பயப்படவேண்டியதாக இருக்கிறது.

இன்னொன்று. அடகு பிடிக்கிற நகைகளை அவர்கள் தாங்கள் எந்த இடத்தில் இருக்கிறார்களோ அந்த இடத்திலேயே வைத்துக் கொள்வது என்றால் நகைக்கே ஆபத்து வந்துவிடக்கூடும். ஏனென்றால் இன்றையதினம் அவர்களுக்கு எவ்விதமான பாதுகாப்பும் கிடையாது. ஆகவே அடகு வைத்த பொருளை மீட்கப் போகும்போது சிறு நகைகளாக இருந்தால் உடனே கொடுத்து விடுகிறார்கள். பெரிய நகையாக இருந்தால் மறுநாளைக்குக் கொடுக்கிறார்கள். நகைகள் வைக்கும்போதும், வாங்கும்போதும் எடை போட்டுத்தான் எடுத்துக் கொள்ளப்படுகிறது. ஆக இன்றைய தினம் அடகு பிடித்த நகைகளைத் திரும்பவும் அடகு வைக்கப்படுகிறது என்பது ஒருபுறம் இருக்க — பாதுகாப்புக்காகவும் இன்னொரு இடத்தில் வைக்கப்படுகிற நிலை இருக்கிறது. பாதுகாப்பு இருந்தால் அதற்கு அவசியம் இல்லை. சொந்த வீடாக இருந்தாலும் அதற்கு ஏற்பாடு செய்யலாம். ஆனால் பல பான் ப்ரோக்கர்கள் பாதுகாப்பற்ற வாடகை வீட்டில் இருந்து கொண்டெல்லாம் இத் தொழிலை நடத்துகிறார்கள். ஆகவே அடகு பிடிக்கிற நகைகளை எல்லாம் அவர்களிடமே வைத்துக் கொள்ள வேண்டுமென்றால் அது முடியாத காரியமாக இருக்கும். ஆகவே அடகு வைத்த நகைகளை அவர்கள் பத்திரமாக வைப்பதற்கு — தஞ்சை ஜில்லாவில் நெல்லை வைப்பதற்கு சர்க்கார் கோடவுன்கள் கட்டிக் கொடுத்திருப்பதுபோல—ஒரு பாதுகாப்பான இடத்தை ஏற்படுத்திக் கொடுத்தால் வசதியாக இருக்கும். அதற்காக

20th August 1960] [Srimathi T. N. Anandanayaki]

ஒரு 'லைசென்சு பீ' என்று ஏற்படுத்தினாலும் கூடப் பரவா யில்லை. ஆகவே, இதுபோன்ற பலவற்றைப் பற்றியும் நன்றாக ஆராய்வதற்கு இதைப் பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்புவதுதான் நல்லது என்று சொல்லிக்கொண்டு, என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

SRI T. T. DANIEL: Mr. Speaker, Sir, I fully support the view that has been expressed by the hon. Member from Shencottah especially in view of the fact that after the fall of the Palai Central Bank, there has come a lot of difficulties for the poor people. I shall also draw the attention of the Government to clause 14-D and request to know whether it is necessary. That relates to maintenance of certain registers by auctioneers and sub-clause (2) gives power to the Sub-Inspector of Police to inspect the registers kept by pawners. I wish to know whether such an important power should be given to a Sub-Inspector. This is a matter which the Government should seriously consider. I would submit to the Hon. Minister that instead of 'Sub Inspector', an R.D.O. or some other inspecting officer of Government might be entrusted with that responsible work. Pawners also should not be harassed by the Police unnecessarily. It is said that the Police Officer can at any time within three years, after the auction of the articles pawned, have the authority to go to the pawners' house and inspect the registers. I would request the Government to seriously consider whether such a provision is necessary.

SRI S. M. ANNAMALAI: இந்த மசோதாவானது செலக்ட் கமிட்டிக்குப் போவது குறித்து நான் வரவேற்கிறேன். இந்த மசோதா பூராவையும் நான் படிக்கவில்லை. அப்படியிருந்த போதிலும் ஒரு சில கிளாஸ்களை மட்டும் பார்த்தேன். அப்படி பார்க்கிறபோது க்ளாஸ் 4-ல் வட்டியைப் பற்றி சொல்லி யிருக்கிறது. பழைய சட்டத்தைப் பார்த்தால், 1943-ம் வருடச் சட்டத்தைப் பார்த்தால்,

"No pawn broker shall charge interest in respect of a loan on pledge at a rate exceeding 12 per cent."

என்றிருக்கிறது. பழைய சட்டத்தில் 9-3/8 பர்சென்ட் என்றிருக் கிறது. அதை இப்பொழுது அதிகமாக்கி யிருக்கிறார்கள். பழைய சட்டத்தில் 6-1/4 பர்சென்ட் என்றிருந்ததை இப்பொழுது 9 பர்சென்ட் என்று வட்டியை மேலும் உயர்த்தியிருக்கிறார்கள். வட்டியை உயர்த்த வேண்டியதில்லை. 6-1/4 பர்சென்ட், 9-3/8 பர் சென்ட் என்பதே போதும். ஆகவே பொறுக்குக் குழு இதை நல்லமுறையில் பரிசீலனை செய்து பார்த்து முடிவு எடுக்க வேண்டும். மணி லெண்டர்ஸ் பில் வந்தபோதே இதையும் கொண்டு வந்திருக்க வேண்டும். அப்பொழுது சொல்லப்பட்டது, பான் ப்ரோக்கர்ஸ் பில்லில் சேர்க்க வேண்டிய அவசியமில்லை, தனி மசோதா கொண்டு வரலாம் என்று சொல்லப்பட்டது. இதை அப்பொழுதே கொண்டு வந்திருக்கலாம். இவ்வளவு காலதாமத மாகி வந்தபோதிலும் செலக்ட் கமிட்டி இதை நல்ல முறையில் பரிசீலனை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI V. SUBBIAH: இந்த லேவாதேவிச் சட்டத்தில், முக்கியமாகப் பல பகுதிகளைக் கவனிக்க வேண்டியிருக்கிறது. இன்றையதினம் மார்வாடிகள் என்ன செய்கிறார்கள் என்றால், சாதாரணமாக இன்று சென்னை நகரத்திலுள்ள டாக்ஸிக்காரர்கள் சின்ன வெற்றிலை பாக்கு கடைக்காரர்கள் இவர்களுக்கு 100 ரூபாய் கடன் கொடுத்து விட்டு 200 ரூபாய்க்கு ப்ரோ நோட் எழுதி வாங்கும் செயல் இருந்து கொண்டிருக்கிறது. இதுமட்டுமல்ல. நகையீட்டின் பேரில் வருடத்திற்கு 18 ரூபாய் வட்டி வாங்கு கிறார்கள் என்றால், இது மிகக் கொடுமையான முறையல்லவா? இப்படிப்பட்ட பல முக்கியமான சம்பவங்களைப் பொறுக்கு கமிட்டி பரிசிலனை செய்து பார்த்து இந்தமாதிரி பெரிய நகரங்களில் வட்டி வாங்கப்படுவதைப் பார்த்தால் லேவாதேவி முறைக்கே ஹானி விளைவிக்கக் கூடியதாயிருக்கிறது. சாதாரண ஏழைகள், சின்ன வியாபாரிகள், டாக்ஸிவாலாக்கள், ரிக்ஷாவாலாக்கள் இவர்களைப் போன்றவர்களுக்கு இனியாவது விமோசனம் கிடைக்கத் தக்க முறையில் செலக்ட் கமிட்டி இந்த மசோதாவைப் பரிசிலனை செய்து முடிவு எடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

SRI P. S. CHINNADURAI: கனம் சபாநாயகர் அவர்களே, அடகுக் கடைக்காரர்களின் பாதுகாப்பிற்காகக் கொண்டு வரப் பட்டிருக்கிற இந்த திருத்த மசோதா செலக்ட் கமிட்டிக்குப் போவது பொருத்தமே. இந்தத் திருத்தங்கள் பலவற்றிற்கும் அவசியமில்லை என்பதுதான் என் கருத்து. இந்தக் கருத்துக்களை விரிவாக செலக்ட் கமிட்டியில் எடுத்துச் சொல்ல வசதி யிருக்கும். இருந்தாலும் இங்கு ஒரு விஷயத்தைப் பற்றி குறிப்பிடவேண்டுமென்றுதான் நான் பேச எழுந்திருக்கிறேன். உதாரணமாக, இந்தத் திருத்த மசோதா கொண்டு வரப் படுவது, துர்பாக்கியகரமான நிலையில் இருக்கிற, அடகு வைக்க வேண்டிய ஒரு நிர்ப்பந்தத்திற்கு ஆளாக்கப் பட்டிருக்கிற மக்களுக்கு உதவி செய்வதற்காகக் கொண்டு வரப் பட்டிருக்கிறதா என்று பார்த்தால் அப்படி இல்லை. அடகு வாங்கு கிறவர்களின் லாபத்தை அதிகப்படுத்த வேண்டுமென்ற நோக்கத் தோடு கொண்டு வரப் பட்டிருக்கிற ஒரு திருத்த மசோதாவாகத் தான் இந்த மசோதா அமைந்திருக்கிறது. ஏற்கனவே இருக்கிற சட்டத்தின் மூன்றாவது ஷரத்திற்கு கொடுக்கப்பட்டிருக்கிற திருத்தம், ஏற்கனவே இருப்பதைக் காட்டிலும் 50 பர்சென்ட்க்கு மேல் வட்டியை உயர்த்தி அடகு வாங்குகிறவர்களுக்கு நல்ல லாபத்தை சம்பாதித்துக் கொடுக்கக்கூடிய முறையில் இந்த மசோதா அமைந்திருக்கிறது. ஏற்களவே இருந்த வட்டி விகிதத்தை அதிகப்படுத்துவதற்கு என்ன அவசியம் நேர்ந்தது? அடகு வாங்குகிறவர்கள், அப்படி வட்டியை அதிகப்படுத்திக் கொடுக்கத் தான் வேண்டும், அதற்கான முறையில் ஒரு மசோதா கொண்டு வர வேண்டியது அவசியம் என்று ராஜ்ய சர்க்காரிடம் அவர்கள் முறையிட்டுக் கொண்டதன் விளைவாக இந்தத் திருத்த மசோதா வந்திருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன். அவர்கள் அப்படிக் கோரவில்லை என்றால் எதற்காக வட்டியை, ஏற்கனவேயே முந்தைய மசோதாவில் எந்தளவு நாம் நிர்ணயம் செய்திருந் தோமோ அதைவிட 50 பர்சென்ட் உயர்த்த வேண்டிய அவசியம்

20th August 1960] [Sri P. S. Chinnadurai]

என்ன நேர்ந்தது? ஏற்கனவே உள்ள வட்டியே அதிகம் என்று சிறிய அளவில் கடன் வாங்குகிறவர்களும், உழைப்பாளி மக்களும் கருதி வந்திருக்கிறார்கள். அப்படியிருக்க அந்த வட்டியைக் காட்டிலும் அதிக வட்டி கொடுக்க வேண்டுமென்று ஒரு திருத்த மசோதா கொண்டு வருவது தேவைதானா என்பதுபற்றி ராஜ்ய சர்க்கார் இங்கு விளக்கிக் கூற வேண்டுமென்று விரும்புகிறேன். அடகு வைக்க நேருகிறவர்கள் தங்கள் பட்டுச் சேலைகளை, மூக்குத்தியை, காது தோடு போன்ற சிறிய நகைகளை அடகு வைத்து தற்காலீகமாக வாழ்க்கைச் செலவிற்குப் பணம் வாங்க வேண்டிய நிர்பந்தத்திற்கு ஆளாக்கப் பட்டிருக்கிறவர்கள் பெரும்பாலும் சாமான்ய மக்கள்தான். அன்றாடம் உழைத்துச் சம்பாதிக்கக் கூடிய நிலையில் இருக்கிறவர்கள்தான். ஏதாவது ஒரு நோய் நொடி வந்து விட்டால் அல்லது வேறு ஒரு நெருக்கடி வாழ்க்கையில் ஏற்பட்டு விட்டால், அந்தச் சந்தர்ப்பத்தில் தான் அடகு வைப்பது என்ற நிலைக்கு அவர்கள் உந்தித் தள்ளப்படுகிறார்கள். தாங்கள் மிக அருமையாக வைத்திருக்கக் கூடிய சிறு பொருள்களைக் கூட அடகுக் கடைக்காரனிடம் கொடுத்து விட்டு அதற்கு வட்டியும் செலுத்த வேண்டிய நிர்பந்தத்தில் இருக்கிற சாமான்ய மக்களுக்கு உதவி செய்வதற்குப் பதிலாக அவர்களுக்கு மேலும் உபத்திரவம் அளிக்கும் முறையில் வட்டியை அநியாயமாக உயர்த்துவதற்கு ராஜ்ய சர்க்கார் ஏற்பாடு செய்து கொடுப்பது எந்த வகையில் நீதிக்கு உகந்தது என்று கேட்க விரும்புகிறேன். அது எந்த வகையில் அவர்களுக்கு நீதி வழங்குவதாகும்? வட்டியை உயர்த்திக் கொண்டு வரப் பட்டிருக்கும் மசோதாவினால் அவர்கள் அடகு வைத்திருக்கும் பொருள்களையே மீட்க முடியாததொரு நிலை ஏற்படாதா? இதை அரசாங்கம் சிந்தித்துப் பார்த்துத்தான் வட்டியை உயர்த்த வேண்டுமென்ற முடிவிற்கு வந்திருக்கிறார்களா? ஒரு கால் அரசாங்கத் தரப்பில் சொல்லக்கூடும், இன்று நாம் ஒரு வட்டி நிர்ணயம் செய்திருந்த போதிலும் அதை விட அதிகப்படியான வட்டியைத்தான் நடைமுறையில் அடகுக் கடைக்காரர்கள் வாங்கிக் கொண்டிருக்கிறார்கள். சட்டத்தில் நிர்ணயித்திருப்பதை விட அதிகப்படி வட்டி வாங்கிக் கொண்டிருப்பதால் சட்டத்தை சரிவர அமுல் நடத்த முடியவில்லை. ஆகவே இப்பொழுது அவர்கள் வாங்குகிற கூடுதலான வட்டியையொட்டி அதற்கேற்றவாறு உயர்த்தி விடலாம் என்ற எண்ணத்தோடு இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறோம் என்று கூறப் போகிறார்களா? ஏற்கனவே நிறைவேற்றிய சட்டத்தை அமுலாக்குவதற்கு இந்த ராஜ்ய சர்க்காரால் முடியவில்லை என்று சொன்னால் அதற்கு என்ன காரணம்? கவனக் குறைவா? அல்லது திறமைக் குறைவா? அல்லது துணிச்சல் குறைவா? இதில் எது காரணம் என்பதை அரசாங்கம் இங்கு வெளிப்படையாக எடுத்துக்கூற வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

மற்ற திருத்தங்களின் தன்மைகூட அடகுக் கடைக்காரர்களுக்கு நன்மை அளிக்கத்தக்கதாய் அமைந்திருக்கின்றன என்பதைக் குறிப்பிடாமல் இருக்க முடியாது. ஆகவே, இந்த மசோதாவானது

பொறுக்கு கமிட்டிக்குப் போவது மிகவும் பொருத்தமானதுதான். பொறுக்குக் கமிட்டியில் இதைப் பற்றி விரிவாக விவாதிக்க முடியும் என்று நினைக்கிறேன். பொறுக்குக் கமிட்டியில் அதைப் பற்றி விவாதிக்கப்படும்பொழுது இப்போதுள்ள திருத்தங்கள் எல்லாம் அடியோடு மாற்றி அமைக்கப்படும் என்றும், முடிவாக அடகு வைக்கவேண்டிய நிர்ப்பந்தத்தில் இருக்கும் சாமான்ய மக்களுக்கு நன்மை அளிக்கத்தக்க முறையில் இந்தத் திருத்த மசோதா உருவாக்கப்படும் என்கின்ற நம்பிக்கையைத் தெரிவித்துக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவினுடைய முக்கிய நோக்கம் அடகு, லேவாதேவி செய்கிறவர்கள் எல்லோரும் பதிவு செய்து கொள்ளவேண்டும், நல்ல முறையில் கணக்குகள் எல்லாம் வைத்துக் கொள்ள வேண்டும், அடகு வைக்கின்றவர்களின் பார்வைக்கு அது இருக்கவேண்டும், அடகு வைத்த பொருள்களை இன்ஸ்பெக்ஷன் செய்வதற்கு வசதி இருக்கவேண்டும், இம் மாதிரியான சலுகைகளை எல்லாம் அடகு வைக்கிறவர்களுக்கு ஏற்படுத்திக் கொடுப்பதற்காகத்தான் இச்சட்டம் கொண்டு வரப் பட்டது. அதோடு இந்தத் திருத்த மசோதாவில் அதிகமாகக் கொஞ்சம் வட்டி விதிக்கப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி கனம் அம்மையார் அவர்களும் சொன்னார்கள். சட்டத்தில் எவ்வளவு தான் குறைவாக இருந்தாலும் கூட வேறு விதமாக அவர்கள் வட்டி வாங்கிக் கொண்டுதான் இருக்கிறார்கள். வெளியே அதிகமான வட்டிக்கு கொடுத்துக்கொண்டும் வாங்கிக்கொண்டும் இருக்கும் பொழுது ஏட்டில் மட்டும் 2 பர்சென்ட் அல்லது 3 பர்சென்ட் என்று எழுதி வைப்பதால் என்ன பிரயோஜனம்? நடைமுறையில் இருக்கின்ற அளவுக்கு ஓரளவுக்குப் பொருத்தமாக இருக்க வேண்டும். இந்தச் சட்டம் முதலில் 1943-ல் கொண்டு வரப் பட்டது. இப்போது நடப்பது 1960. எல்லாத் துறையிலும் வட்டி விகிதங்கள் எல்லாம் அதிகரித்துக் கொண்டிருக்கிறது. அதிலும் 12 பர்சென்ட் அதாவது 100-க்கு 12 வட்டி என்பது தர்ம வட்டி அல்லது நியாயமான வட்டி என்று தான் ஜனங்கள் சொல்லுவார்கள். அதற்கு மேல் இருந்தால் தான் கூடுதலான வட்டி என்று சொல்ல முடியும். அது மட்டுமல்லாமல் சட்டத்தில் மட்டும் குறைவாகப் போட்டுக் கொண்டு நடைமுறையில் வேறு வட்டி விகிதம் இருந்து கொண்டிருந்தால் அதில் பிரயோசனம் ஒன்றுமில்லை. அதோடு அரசாங்கம் மிக குறைவாக வட்டி விகிதத்தைப் போட்டால், அதை வைத்துக்கொண்டு "பார்த்தீர்களா அரசாங்கம் 2½ பர்சென்ட் தான் வட்டி போட்டிருக்கிறது, இது மிகவும் குறைவு" என்று சொல்லி, மேலும் அதிகமாக வாங்கிக் கொண்டிருப்பார்கள். ஆகவே எது நியாயமாக இருக்கிறதோ அதற்குத் தகுந்தவாறு நிச்சயிக்கவேண்டும். அந்த முறையில் தான் இதில் போடப்பட்டிருக்கிறது. இதன் பேரில் பல கனம் அங்கத்தினர்களும் பலவிதமான கருத்துக்களைத் தெரிவித்தார்கள். நான் இதை முன்னாலேயே எதிர்பார்த்தேன். அதற்காகத்தான் இந்தத் திருத்த மசோதாவைப் பொறுக்கு கமிட்டிக்கு விடுவதற்கு ஒப்புக்கொண்டேன். ஒரே அடியாக இந்தத் திருத்தத்தை

